# குமரகுருபரன்



மலர் 12] பிலவ-ஞு மார்கழி-மீ 1ம்-உ (16-12-61) [இதழ் 12

...ப்பிரதி 13 நயா பைசா வருடச் சந்தா ரூ. 1½

# ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு

நாளிது மார்கழி மாதத்துடன் "குமரகுருபரன்" பன்னிரண்டு ஆண்டுகள் நிரம்பி, தைத்திங்கள் முதல்த் தேதி பதிமூன்ருவது ஆண்டு எய்துகிருன். தங்களுடைய அன்பும் ஆதரவும் என்றென்றும் பெருகி நிற்கப்பெரிதும் விழைகின்ருன்.

சந்தா பாக்கியுள்ளவர்கள் பாக்கியை அனுப்புவதுடன் 1962-ம் வருடச் சந்தாவையும் சேர்த்து அனுப்பி குமரகுருபரன் வளர்ச்சிக்கு மென்மேலும் ஊக்கமளிக்க வேண்டுகின்றேன். சந்தா பாக்கியில்லாத நண்பர்கள் வழக்கம் போல் 1962-ம் வருடச் சந்தாவை முன் கூட்டியே அனுப்பித்தரவும் கேட்டுக் கொள்கிறேன்.

சந்தா நம்பர் குறிப்பிட்டு எழுதுவதும், முகவரி மாற்றம் உடனுக்குடன் தெரிவிப்பதும் காலதாமதத்தை அகற்றி அலுவலகத்தின் சேவையையும் துரிதப்படுத்தும். புதுச் சந்தாதார்கள் "புதிய சந்தா" என்ற விபரம் குறிப்பிட்டு எழுதுவது நலம்.

நிர்வாக ஆசிரியர்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# "குமரகுருபரன்"

## பன்னிரண்டாவது மலரின் பொருளடக்கம்

—:x:—

பொருள்



## Articles in English





உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு



[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் கிரயம் ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

644 பக்கங்கள் கொண்டது. உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 | பிலவ-ஞு மார்கழித் திங்கள் 1-ம்வ [16-12-61] | இதழ் 12

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்



[ கட்டுரை 52 ]

நடராசரே, பெரிய பல அண்டங்களையும் சிறிய தனது வயிற்றில் அடங்கித் தோன்ற உண்டுவைத்துப் பாற்கடலில் உறங்கும் பெருமகளாகிய திருமாலுக்கும் மால் (மயல்) செய்ய வல்ல பேரழகுடையீர் நீர்; அத்தகைய நும்மைச், சிலமாதர், மகளிர் கைவளையைக்கவர விரும்பியோ நும்தோள் பருத்து வீங்குவது? என்று வினவுகின்றனர்.

இறைவன் திருத்தோளின் பெருமை மகளிர்க்கு மயல் உறுத்தி அவரை இளைக்கச் செய்தலால், வளைகள் நழுவும். அதனை வளைகொள்ள வேண்டித் தோள்பருத்தன என்றனர்.

செந்தமிழ்ச் சொற்களைச் செம்பொருட் பொருத்தம் நன்கு விளங்கத் தொடுத்து(ப்பாமாலையாக நும்திருவடிக்குச் சார்த்தி) அணிசெய்த சுந்தரமூர்த்தி நாயனுர்க்குத் தோழராகிச், சங்கிலி நாய்ச்சியாரிடத்தும் பரவைநாய்ச்சியாரிடத்தும் நள்ளிருளிற் செல்லவல்லீர் நீர்.

திருவொற்றியூரில் இறைவன் கனவில் சங்கிலியார்க்கு அருளியதும், திருவாரூரில் பரவைநாய்ச்சியார்பால் தூதுசென்றதும் வெளிப்படை. அதனுல் குழலியர் என்று பன்மையிற் கூறினுர் ஆசிரியர்.

அவ்வாறு மகளிர்பால் அளவில்லாத இரக்கம் உள்ள நும் கருணைக் கண்களுக்கும் கொடுமை உண்டு என்று தவருக் கொண்ட சிலமாதர், தம் மயக்கத்தால் யோகசமாதிக்குப் பகையாய் வந்து போகம் விளைக்கும் முயற்சியால் சுருப்பு நாணுடைய கருப்புவில்லில் அருப்புக்கணையை வைத்த கருவேள் ஆவியைக் கவர்ந்துண்ட கண்ணுக்கு, மாதர் பலர் உயிரைக் கொள்ளுதல் பழியன்ரே?

நன்மாலைக் குழலியர் இருவர் பொருட்டு நள்ளிருளிற் சென்று நலம் செய்த நல்லீர் நீர்; அன்றியும் மாரனுயிர் கொண்ட திருக்கண்ணுடையீரானீர். அம்மாரன் மனைவியான இரதி வேண்ட அவனை வாழ்வித்தீர். இங்கனம் மாதர்க்கு நலமே செய்துவரும் இயல்புடைய நீர், இங்கு மாதர் பலர்க்கு மயல் விளைத்துத் துயர் உறுத்தல் முரண்பட்ட செய்கையன்ரே? என்றனர் சிலமாதர்.

'சொற்றமிழ் பாடுகென்ருர் தூமறை பாடும் வாயார்' (பெரிய, தடுத்தாட். 70). தூமறை – நால்வேதம், நான்கு மறைகளையும் அருளிய திருவாயினுர் தமிழ்மறையைத் தம்பிரான் தோழர் வாயால் வேண்டிப் பெற்ருர். அதைச், 'சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய் தன்மாலைக் குழலியர் பால் நள்ளிருளிற் செலவல்லீர்' என்று குறித்தார். தமது வேட்கை அந்நாயனுரது வேட்கைக்கு நள்ளிருளிற் செல்லும் அலைவு அளித்தது. ஆசைப்பட்டார் அல்லற்பட்டார்.

அழகிய தாமரையில் வாழ்ச்சியன் நான்முகன். அவனது தலையைக் கொய்தான் அரன். அதையே பலிப்பாத்திரமாகக் கொண்டான். அதில் ஐயம் இட்டனர் தாருக வனத்து முனிவர்க்குப் பத்தினிப் பெண்டிர். அவர்களது நலத்தைக் கவர்தற் பொருட்டுப் பிச்சை யெடுத்துழலத் துணிந்தான் பெருஞ் செல்வன். அதுமுதலாகப் பிக்ஷாடனன் ஆனான். அத்தகைய மாதவத்தன் பரமசிவன். (மா + தவத்திர் = பெருந்தவத்தை யுடையீர். அம்மாதர்க்கு அவத்தை விளைத்தீர்).

அப் பிக்ஷாடனரை விளித்துச் சிலமாதர், 'பகைவர் வாழும் திரிபுரத்தைப் போல்வதே உம் சிரிப்பிற்குத் தலையன்பினை யுடைய நங்கையர் உடம்பும் என்றனர். அதற்கு என்ன கருத்து? சிவபிரான் நகை திரிபுரத்திற்கு வெம்மையை விளைத்தது. மகளிர்க்கு அவனது புன்னகை காதல் வெம்மை விளைக்கிறது என்பது. அதனால், நங்கையர் ஒவ்வொருவர் உடம்பும் வெம்மை எய்தி முப்புரத்தொடு ஒற்றுமை யுற்றன என்றனர். புரம் - திரிபுரம், உடம்பு.

"மேலைப் புரத்தைநகைத் தெரித்தீர்
வில்வேள் புரத்தைப் பகைத் தெரித்தீர்"

என்னும் அருணைக் கலம்பகச் செய்யுட் பகுதியால் அச் சிலேடைப் பொருள் நன்கு தெளிவுறலாம்.

மாதர், தமக்கு இறைவனால் உற்ற மயலால் ஆடை கலையப் பெற்றனர். கலைத்திறம் உற்ற கலை காதலாற் கலையவும், கன்னியர் கலைமானை ஏந்திய கடவுளுக்கு இயற்கையாகிய திகம்பரத்தைச் செயற்கையில் எய்தினர். அதனை ஆசிரியர்,

"அருங்கலை கவர்ந்துநீர் அளிக்கப் பெற்றநும்
இருங்கலை இனிதெமக் கென்பர் ஓர்சிலர்".

என்று மிக நயம் உறப்பாடினார்.

மகளிர் ஆடையை இழந்தே திகம்பரரானவாறு. அவ்வாற்றைக் கவர்ந்து அளித்தான் எனக் கடவுள்மேல் ஏற்றியும் பெற்று இனிமையுற்றேம் 'என'த் தம்பாற் சார்த்தியும் அம் மகளிர் சொல்லினர் எனச் சொல்லினார் ஆசிரியர்.

சிவன் 'செம்மேனி யெம்மான்'. அது அவனுக்கே சொந்த மான பொன்னிறம். மகளிர்க்குள்ள மாமை நிறம் நன்னிறம் எனவும் பசலை நிறம் பொன்னிறம் எனவும் கூறப்பட்டன. அதனால்,

"நன்னிறம் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிறம் இனிதெனப் புகல்வர் ஓர்சிலர்"

என்றார் ஆசிரியர்.

சிற்சிலமாதர் சிவபிரான் ஏறிவரும் திருப்பவனியில் தேரையே நோக்கித் திரிவர். மற்றும் சிற்சிலர் அவனது அழகையே நோக்கி எழுவர். சிற்சிலர் அவனது மாலையையே நோக்கி வாடுவர். சிற்சிலர் அவனது மார்பையே நோக்கி மருள்வர்.

சிலர் நலன் அழிந்து நிற்பர். சிலர் நாணம் துறந்து நிற்பர். இத்துறவு உயிர்ப் பொருட்டாக நாண் துறந்ததன்று. அருட்பொருட்டாக நாண் துறந்த அரும்பெரும் பண்பு. சிலர் அணிகலன்கள் அழிந்து நிற்பர். சிலர் கண்ணீர் கலுழ்ந்து நிற்பர்.

சிலர் பாடுவர். சிலர் ஆடுவர். சிலர் வாழ்த்துவர். சிலர் கூடுவர். சிலர் வாடுவர். சிலர் ஓடுவர். சிலர் மகிழ்வர். சிலர் புகழ்வர். அங்கொருபால், ஓர் எவ்வன பாலகுஜாம்பா; மழலைத் தீஞ்சொல்லாள்; அவளும் முற்குறித்த மகளிரொடும் பவனிவரும் பரமேசுவரனைப் பணிந்து கொண்டு நின்றாள். அவளுக்கும் மேகலை சோர்ந்தது. தோள்வளை நெகிழ்ந்தன. அவள் மேற்பூசிய சந்தனமும் கரிந்தது. பட்டமுத்தும் தீய்ந்தன. அவ்வளவு காமாக்கினி தீபனம். அவளே இவ்வாறு ஆயினள் எனின், பிறர் எவ்வாறு ஆவர்? செவ்வாம்பல் போன்றது வாய். அவ்வாயில் முல்லையரும்பைப் போன்ற பற்களும் தோன்ற வில்லை. சாலவும் இளையள் அவள். ஆயினும் காமநோய்க்குச் சாலவும் முதியளாயிருந்தாள். பேதைப் பருவத்துப்பெண்ணாகிய அவளும் மங்கைப் பருவத்தாள் போலக் காதல் மயக்கம் கொண்டாள் என்று வியந்தவாறு.

'முதுக் குறைந்தனளே முதுக் குறைந்தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே'
என்னும் பழம்பாடலை ஈண்டுக் காண்க.

— தரவு —

பேதைமீர் பேதைமீர்
பூமன்னு திசைமுகனும் புயல்வண்ணப் பண்ணவனும்
காமன்னு புரந்தரனுங் கடவுளரும் புடைநெருங்க
இருகோட்டுக் கிடைந்தவிடு கிடையவர்பல் லாண்டிசைப்ப
ஒருகோட்டு மழகளிறு மிளங்கோவு முடன்போத
அம்பொன்மணி மதிற்றில்லை நடராச னணிமறுகில்
செம்பொன்மணிப் பொலந்திண்டேர்த்திருவுலாப் போதுங்கால்.

— தாழிசை —

பாரித்த பேரண்டஞ் சிறுபண்டி கொளப்பெய்து
வாரித்தண் புணற்றுஞ்சு மாலுக்கு மால்செய்வீர்
வேரித்தண் குழலார்கை வளைகொள்ள விழைந்தேயோ
பூரித்து வீங்குவதும் புயமென்பார் சிலமாதர்.
சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய்
நன்மாலைக் குழலியர்பா னள்ளிருளிற் செலவல்லீர்
பன்மாத ருயிர்கொள்ளல் பழியன்றே பகைகொள்ளும்
வின்மார னுயிர்கொண்ட விழிக்கென்பார் சிலமாதர்.
அங்கமலன் முடைத்தலையே பலிக்கலனு வையமிடும்
மங்கையர்க ணலங்கவர்வான் பலிக்குழலு மாதவத்தீர்
தங்கலர்தங் கியமும்மைப் புரமன்றே தலையன்பின்
நங்கையர்தம் புரமுமது நகைக்கென்பார் சிலமாதர்.

— ஈரடி அம்போதரங்கம் —

அருங்கலை கவர்ந்துநீ ரளிக்கப் பெற்றநும்
இருங்கலை யினிதெமக் கென்பரோர் சிலர்.
நன்னிறங் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிற மினிதெனப் புகல்வ ரோர் சிலர்.

— நாற்சீர் ஓரடி அம்போதரங்கம் —

தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்.
ஏரினை நோக்கியே யெழுவர் சிற்சிலர்.
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்.
மாரினை நோக்கியே மருள்வர் சிற்சிலர்.

முச்சீரோரடி அம்போதரங்கம்

நலனழிந்து நிற்பார் சிலர்.
நாண்டுறந்து நிற்பார் சிலர்.
கலனழிந்து நிற்பார் சிலர்.
கண்கலுழ்ந்து நிற்பார் சிலர்.

— இருசீர் ஓரடி அம்போதரங்கம் —

பாடு வார்சிலர். ஆடு வார்சிலர்.
பரவு வார்சிலர். விரவு வார்சிலர்.
வாடு வார்சிலர். ஒடு வார்சிலர்.
மகிழு வார்சிலர். புகழு வார்சிலர்.

ஆங்கொருசார்

— சுரிதகம் —

முதிரா விளமுலை மழலையந் தீஞ்சொல்
மங்கை மற்றிவ ணங்குலக் கொழுந்து
கணங்குழை யவரொடும் வணங்கின ணிற்பச்
சோர்ந்தது மேகலை நெகிழ்ந்தன தோள்வளை
சாந்தமுங் கரிந்தது தரளமுந் தீந்தன
இவ்வா றுயின ளிவளே செவ்விதின்
ஆம்பற் பூவின் முல்லையு முகைத்தில
இளையோள் சாலவு மம்ம
முதியோள் போலுங் காம நோய்க்கே.

———

[தொடரும்]

# மதுரைக் கலம்பகம் உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

[மலர் 12. இதழ் 11-ன் தொடர்ச்சி]

எய்யாது நின்றொருவன் எய்வதுவும்
இளையாள்தன் இளைப்பும் புந்தி
வையாதார் வைதலுறின் மதியார்தாம்
மதித்திடுதல் வழக்கே யன்றோ
மெய்யாத மெய்கடிந்து வீடாத
வீடெய்தி வீழார் வீழச்
செய்யாள்செய் சரக்கறையாந் திருவால
வாயிலுறை செல்வ னூரே. 19

தனது உருவத்தைப் பிறரறியாதபடி நின்று கொண்டு மன்மதனாகிய ஒருவன் மலர்ப் பாணங்களை எய்வதையும், இளைய வளாகிய இவளது இளைப்பையும் மனத்தில் வைக்காத இவளுடைய சுற்றத்தார் பழிக்கத் தொடங்கினால் நிலையில்லாத தாகிய உடம்பை விட்டு விட்டு அழியாததாகிய முத்திப்பேற்றை அடைந்து இங்கே வராத முத்தர்களும் விரும்பும்படி செய்யவளாகிய திருமகள் செய்த எல்லாப் பொருள்களும் நிரம்பிய சரக்கறை போன்ற திருவாலவாய்ப் பதியில் எழுந்தருளியிருக்கின்ற செல்வரே! மதியை உடைய வராகிய நீர் மதித்து வந்து இவளைக் கூடுதல் நியாயமல்லவா?

ஆறுதலை வைத்தமுடி நீணிலவெ றிப்பவெமை
ஆளுடைய பச்சை மயிலோ
டீறுமுத லற்றமது ராபுரியி லுற்றபர
மேசரொரு சற்று முணரார்

நீறுபடு துட்டமதன் வேறுருவெ டுத்தலரி
வீள்சிலகு னித்து வழிதே
னூறுகணை தொட்டுவெளி யேசமர் விளைப்பதுமெ
னூழ்வினை பலித்த துவுமே. 20

கங்கையாற்றை அடக்கி வைத்த திருமுடியில் நீண்ட சந்திரன் ஒளியை வீச எம்மை அடிமையாக உடைய பச்சை மயில் போன்ற மீனாட்சியம்மையோடு முடிவும் முதலும் இல்லாத மதுராபுரியில் எழுந்தருளியிருக்கின்ற பரம்பொருளாகிய சொக்கேசர் தனது நெற்றிக் கண் ணெருப்பினுல் வெந்து சாம்பலாகிய கொடிய மன்மதன் வேறொரு வடிவத்தை எடுத்துக் கொண்டு வந்து மலராகிய நீண்ட வில்லை வளைத்து வழிகின்ற தேனூறு கின்ற மலரம்புகளை எய்து புறத்திலே போர் செய்வதையும் எனது முற்பிறப்பிற் செய்த வினை வந்து பலித்ததையும் ஒரு சிறிதும் அறியார் போலும்.

பல்லா ருயிர்க்குயி ராமது ரேசரப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பன்று காணின் களபக்கொங்கை
வல்லானைக் கேயிட வாய்த்தது போலுமென் வாட்கணன்னுய்
வில்லார் புயத்தண்ணல் தண்ணளி யாற்றந்த மென்றழையே.21

எனது வாட்படை போன்ற கண்களை உடையவளே! வில் பொருந்திய தோளையுடைய பெருந்தன்மை உடையவனுன தலைவன் குளிர்ந்த அன்பினுல் உனக்குத் தந்த மென்மையான இத்தழை எல்லோருடைய உயிர்களுக்கும் உயிராக விளங்குகின்ற மதுரை இறைவராகிய சொக்கேசப் பெருமான் அபிடேக பாண்டியனென்றும் அரசன் காணக் கல்லினுலாகிய யானை உண்ணும்படி அதற்குக் கொடுத்த கருப்பந்தழை போன்றதன்று. உனது கலவைச் சாந்தணிந்த கொங்கையாகிய வலிய யானைக்கே இடுதற்கு அமைந்தது போலும்!

தழைத்திடுங் கூடலார், குழைத்துடன் கூடலார்
பிழைத்திடுங் கூடலே, இழைத்திடுங் கூடலே. 22

செழிப்பு மிகுந்த மதுரையம்பதியில் எழுந்தருளி யிருப்பவரான சொக்கேசப் பெருமான் என்னை மகிழச் செய்து விரைவாக

வந்து என்னைக் கூடுகின்றாரில்லை. இழைக்கின்ற கூடற்சுழியும் பிழைந்து விடுகின்றது.

கூடலம்பதி கோயில்கொண், டாடல்கொண்டவ ராடலே
ஊட லும்முடம் பொன்றிலே, கூடலும்மொரு கொம்பரோ 23

பூங்கொம்பு போன்றவளாகிய எனது மகள் ஊடுதலும் அவ்வூடல் நீங்கிக் கூடுதலும்ஓர் உடம்பிலேயாம். அழகிய மதுரையம்பதியில் திருக்கோயில்கொண்டெழுந்தருளி யிருந்து திருவிளையாடல்களைச் செய்தருளியவராகிய சொக்கேசப் பெருமானது திருவிளையாட்டு என்ன வியப்புடையதாயிருக்கிறது?

கொம்மைக் குவடசையக் கூர்விழிவேல் போராடக்
கம்மக் கலனும் சிலம்புங் கலந்தார்ப்ப
மும்மைத் தமிழ்மதுரை முக்கணப்பன் சீர்பாடி
அம்மென் மருங்கொசிய ஆடுக பொன் னூசல்
அழகெறிக்கும் பூண்முலையீர் ஆடுக பொன் னூச்ல். 24

பருத்த கொங்கைகளாகிய மலை உச்சிகள் அசையவும் கூர்மையான கண்களாகிய வேற்படைகள் போரைச் செய்யவும் அரிய வேலைப்பாடுகள் அமைந்த காலணியும் சிலம்பும் கலந்து பேரொலி எழுப்பவும் இயல் இசை நாடகமாகிய மூவகைத் தமிழும் வழங்குகின்ற மதுரையம்பதியிலே உள்ள மூன்று கண்களையுடைய தலைவராகிய சொக்கேசரது சிறப்பைப்பாடி அழகிய மென்மையான இடையானது துவளும்படியாகப் பொன் னூசல் ஆடுவீர்களாக. அழகு விளங்குகின்ற அணிகலன்களை யுடைய கொங்கைகளை உடையவர்களே! பொன்னூசல் ஆடுவீர்களாக.

அழகுற்றதொர் மதுரேசனை யமரேச னெனக்கொண்
டாடுங்களி யானின்றிசை பாடுங்களி யேம்யாம்
பொழுதைக்கிரு கலமுறுபைந் தேறற்பனை யினைநாம்
போற்றிக்குரு மூர்த்திக்கிணை சாற்றத்தகு மப்பா
பழுதற்றதொர் சான்றுண்மை பயின்றூர்தின முயன்றால்
பலமுண்டதி னலமுண்டவ ரறிவார்பல கலைநூல்
எழுதப்படு மேடுண்டது வீடுந்தர வற்றால்
எழுதாததொர் திருமந்திர மிளம்பாளையு ளுண்டே. 25

அழகு பொருந்திய ஒப்பற்ற திருமதுரைக்குத் தலைவனாகிய சொக்கேசப் பெருமானைத் தேவர்களுக்கெல்லாம் தலைவனெனக் கொண்டாடுகின்ற மகிழ்ச்சியினால் இறுமாப்புடனிருந்து இசை பாடுகின்ற களியராவோம் நாம். ஒரு வேளைக்கு இரண்டு கலம் சுரக்கின்ற பசிய கள்ளையுடைய பனை மரத்தைப் பாராட்டிக் குருமூர்த்திக்கு ஒப்பாகச் சொல்லலாம். குற்றமில்லாத ஒப்பற்ற சான்றாண்மையைக் கடைப்பிடித்தவர்கள் நாள்தோறும் இந்தக் குருமூர்த்தியினிடம் வந்து முயற்சி செய்தால் தக்க பயன் உண்டாகும். அதிலுள்ள நலத்தை உண்டவரே அறிவார். பல கலைகள் எழுதுகின்ற ஏட்டுச் சுவடிகள் இக்குருமூர்த்தியினிடத்திலே உண்டு. அவைகள் முத்திப் பேற்றையும் கொடுக்க வல்லன. எழுதப்படாததொரு சிறந்த மந்திரம் இளம்பாளையுள் உள்ளது.

உண்பது நஞ்சமால் உறக்கம் இல்லையால்
வண்பதி கூடலே வாய்ந்த தென்னுமால்
பெண்பத நின்னதே பெரும வேள்கணை
எண்பது கோடிமே லெவன்றொ டுப்பதே. 26

பெருமையை உடைய சொக்கேசப் பெருமானே! இவளுக்கு உண்ணும் உணவு நஞ்சாயிருக்கின்றது. உறக்கம் என்பது ஒரு சிறிதும் இல்லை. கூடலென்னும் மதுரையம்பதியே தனக்குச் சிறந்த உறைவிடமாகக் கிடைத்தது என்பாள். பெண்ணாகிய இவளது நிலை உனது கையிலேதானிருக்கிறது. மன்மதன் எண்பது கோடிக்கு மேற்பட்ட பூங்கணைகளை ஏனோ இவள் மேல் தொடுக்கின்றான்?

தொடுத்த ணிந்தது மம்புத ரங்கமே
    சூழ்ந்தி ருந்தது மம்புத ரங்கமே
எடுத்து நின்றது மாயவ ராகமே
    எயிறி றுத்தது மாயவ ராகமே
அடுப்ப தந்தணர் பன்னக ராசியே
    அணிவ துஞ்சில பன்னக ராசியே
கொடுப்ப தையர்க டம்பவ னத்தையே
    கொள்வ தையர்க டம்பவ னத்தையே. 27

மாலையாகத் தொடுத்து அணிந்து கொண்டதும் அழகிய தேவர்களது எலும்புகளையாம். திருமுடியில் தாங்கி இருந்ததும் அலைகளையுடைய கங்கையாற்றின் நீரையாம். தனது உம்பில் பாதியாக ஏற்றுக்கொண்டிருந்ததும் பிரகிருதி மாயை வடிவின ரென்று சொல்லுகின்ற திருமாலின் உடம்பையாம். கொம்பை ஒடித்ததும் வஞ்சனையையுடைய பன்றியையாம். சென்று சேருவது வாழ்த்துதலை உடையவராகிய அந்தணர்களது பல நகரத்திலேயாம். ஆபரணமாகப் பூணுவதும் சில பாம்புத் தொகுதிகளையாம். அடியார்களுக்கு வழங்குவது மேலான வர்கள் வாழுகின்ற உலகத்தையாம். தலைவராகிய சொக்கேசப் பெருமான் தங்குமிடமாகக் கொண்டு வாழுவது கடம்ப வனத்தையாம்.

கடங்கரைக்கும் வெற்பிற் கரைகரைக்கும் வைகைத்
தடங்கரைக்கள் நின்றவநீர் தாமோ–நெடுந்தகைநும்
கூட்டம் புயமே கொடாவிடில்வேள் கூன்சிலையில்
நாட்டம் புயமே நமன். 28

மத நீரைப் பொழிகின்ற மலைபோன்ற யானையின் மேலேறிக் கரையை உடைக்கின்ற வெள்ளத்தையுடைய வைகையாற்றினது அகன்ற கரையிலே நின்றவர் நீர் தாமோ? பெருமைக் குணத்தையுடைய உமது தோள்களைச் சேரும் சேர்க்கையை எனக்குக் கொடுக்கா விட்டால் மன்மதனது வளைந்து வில்லில் வைத்துத் தொடுக்கின்ற தாமரைமலரே எனக்கு யமனாக வந்து சேரும்.

நம்பா நினக்கோல முறையோவெ னக்கால
நஞ்சுண்டு பித்துண்டு நாந்தேவ ரென்பார்
தம்பாவை யர்க்கன்று காதோலை பாலித்த
தயவாளர் கூடல் தடங்காவில் வண்டீர்
செம்பாதி மெய்யும் கரும்பாதி யாகத்
திருத்தோளும் மார்பும் வடுப்பட்ட துங்கண்
டெம்பாவை யைப்பின்னு மம்பாவை செய்வார்
எளியாரை நலிகிற்பின் ஏதாம் இவர்க்கே. 29

மயக்கத்தை அடைந்து நானே பரம்பொருள் என்று சொல்லிய தேவர்கள் பரமசிவனே! உனக்கு ஓலமென்று அலறி எங்களுக்குக் கருணை புரியா திருப்பது முறையோ என்று கூக் குரலிட ஆலகால விடத்தை உண்டு அவர்களது மனைவி யருக்குக் காதோலைகளை நிலை நிற்கச் செய்த அருளாளராகிய சொக்கேசப் பெருமானது கூடற்பதியிலுள்ள பெரிய சோலைகளி லுள்ள வண்டுகளே! சிவந்த தம்முடைய பாதியுடம்பும் கருமை நிறத்தை அடைய அழகிய தோள்களும் மார்பும் வளைத்தழும்பும் முலைத்தழும்பும் கொண்டதைக் கண்டும் எனது விழிப்பாவை போன்றவளாகிய இவளை அழகிய சித்திரப் பதுமையைப்போலச் செயலற்றுக் கிடக்கும்படி செய்தார். எளியவர்களைத் துன்பம் அடையச் செய்தால் அதனுல் இவருக்கு உண்டாகும் பயன் யாதோ?

ஆவமே நாணே அடுகணையே அம்மதவேள்
சாவமே தூக்கிற் சமனுஞ் சமனன்றே
ஓவமே யன்னுள் உயிர்விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியஞ்சும் சொக்கருக்கே. 30

அந்த மன்மதனது அம்பருத்தூணியும் வில் நாணும் கொலைத் தொழிலையுடைய அம்பும் வில்லுமாகிய இவற்றை ஆராயுமிடத்து யமனும் இவற்றிற்கு ஒப்பாக மாட்டான். சித் திரப்பாவையை ஒத்தவளாகிய இவளது உயிரைக் கொண்டு பெண் பழியைக் கொள்ளுகின்ற பாவமே சொக்கேசருக்குப் பெரும் பாவமாகும்.

(தொடரும்)



# வழிபாட்டுப் பயன்

தேவார இசைமணி, திரு. S. சங்கரநாராயணன் அவர்கள்
தாமரங்கோட்டை P. O., பட்டுக்கோட்டை தாலுகா.

---

தில்லைக் கோயில் மணியடிக்கிறது. கந்தன் வழிபாட்டுக்குப் புறப்பட்டான். அவன் நெஞ்சம் கோயிலில் ஈடுபட்டது. தீய எண்ணம் இடம் பெருது ஒதுங்கி நிற்கிறது. அவன் கால்கள் நடக்கின்றன. கோபுரம் காட்சி அளிக்கிறது. கோபுரம் வானோங்கி நிற்கிறது. நெஞ்சம் உயர் நோக்கிற் செல்லுகிறது. தீர்த்தம் காணப்படுகிறது. தண்மையும் சாந்தமும் நெஞ்சிற் படிகின்றன. கந்தனுல் சில கடன்கள் ஆற்றப்பட்டன. பின்னே அவன் கோயிலில் நுழைகிருன். மதில்களும் மண்டபங்களும் பரந்த உணர்ச்சியை ஊட்டுகின்றன. தீப மாலைகளும், மலர் மாலைகளும், குவிந்த கைம்மாலைகளும் உள்ளத்தைத் தூய்மையில் நிறுத்துகின்றன. நடராசப் பெருமானின் ஓவியம் கண்ணில் நுழைகிறது.

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய யெடுத்த பொற்பாத முங்காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மானிலத்தே.

என்னும் பாட்டை ஓர் அன்பர் பாடுகிருர். பாட்டு, காதின் வழி நுழைகிறது. இரண்டோவியமும் ஒன்றிப் புலன்களைக் கவர்ந்து புந்தியில் புகுகின்றன. கந்தனை அமைதிப் பெண்மை மணந்தது. அமைதியுடன் கந்தன் வீடு சேர்கிருன். இவ்வாறு அவன் நாள்தோறும் வழிபாடு செய்து வரலானுன். கந்தன் இருக்கும் போதும், உண்ணும் போதும், உறங்கும் போதும் அவன் நெஞ்சம் கோயிலின் உயிர் ஓவியத்தை மறப்பதில்லை. நாளுக்கு நாள் அவன் மனம் குவிந்து குவிந்து நிலைபெறலாயிற்று. அவன் உள்ளம் கோயிலாயிற்று. அவன் அசைவற்ற ஓவியமானுன். இந்நிலையை யான் எப்படிப் பேசிக் காட்டுவன்! இயலவில்லை. இப்பெருநிலையை சேக்கிழார் எழுத்தோவியத்தில் காட்டுகிருர்; பாருங்கள்:

ஐந்து பேரறிவுங் கண்களே-கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தை யேயாகக் குணமொரு மூன்றும்
திருந்து சாத்து விகமேஆக
இந்து வாழ்சடை யானுடும் ஆனந்த
எல்லையில் தனிப் பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

இஃது எழுத்தா? பாட்டா? ஓவியமா? யோகமா? முத்தியா? என்ன? சுந்தரமூர்த்தியை அணுகல் வேண்டும்; சேக்கிழாரைச் சேரல் வேண்டும். சொலற்கரிய ஒரு நிலையைக் கூட்டியது எது? கோயில்-ஓவிய உருவம்-வழிபாடு. நடராசப் பெருமான்-நன்றுடையான்; தீயதில்லான்; அவனை வழிபடும் நெஞ்சமும் நன்றுடையதாகும்; தீயதில்லாத தாகும். கோயில் நலனை உன்னுங்கள்.

கோயில் வழிபாட்டின் முதலையும் முடிவையும் பார்ப்போம். முதலிலும் முடிவிலும் பிற அடங்கி விடும். முதலில் மணி யோசை முழங்குகிறது. இடையில் பல நிகழ்கின்றன. முடிவில் மந்திரஒலி முழங்குகிறது. வழிபாடு நாதத்தில் (மணியோசை யில், தொடங்கிப் பலவாறு விரிந்து, மீண்டும் நாதத்தில் (மந்திர ஒலியில்) ஒடுங்குகிறது. நாதத்துக்கு அப்பால் பரம்பொருளின் அறிகுறியாக ஓவிய உருவம் பொலிகிறது. அவ்வோவியத்தைத் தியானிக்கத்தியானிக்க அஃது ஒளியாகும். இவ்வொளியை விளங்கச் செய்வது எது? கோயில் வழிபாடு. கோயில் வழிபாடு மனமாசு அகற்றி, நல்லெண்ணத்தைப் பெருக்கி உயிரை ஒளி பெறச் செய்வது கருதற்பாலது.

தமிழ் நாட்டில் தோன்றிய நால்வரும், பன்னிரண்டு ஆழ் வாரும் தெய்வத்திருவருட் சக்தி மயமானவர்; எல்லாம் வல்ல வர். அவர் என்ன செய்தனர்? தமிழ் மறைகளை உலகுய்யத் தந்தனர். எம்முறையில் தந்தனர்? பல தலங்களிலுள்ள ஓவிய உருவைப் போற்றும் வாயிலாகத் தமிழ் மறைகளைத் தந்தனர். தலங்களை நேரே சென்றும் பாடினர்; நேரே செல்லாமலும் பாடினர். அவரால் பாடப்பெற்ற தலங்கள் ஆயிரத்து நூற்றுப்

பதினாறு. (ஆயிரத்தெட்டும் நூற்றெட்டும்). அக்குருமார் அருளிய மறைமொழிகட்கு எவ்வளவு ஆற்றல் உண்டோ, அவ்வளவு ஆற்றல் அவர்தம் திருநோக்கம் படிந்த கோயில்கட்கும் உண்டு. அக்கோயில்களை விடுத்து அவரது நல்லெண்ணங்கள் நீங்கவே மாட்டா. உலகத்திலுள்ள தீமைகளெல்லாம் திரண்டு ஓருருக்கொண்டு அக்கோயில்களைத் தாக்கினாலும், ஆங்குள்ள நல்லெண்ணங்கள் அசையமாட்டா; அகலமாட்டா. அத்தீமைகளையெல்லாம் நீருக்கும் ஆற்றல், பெரியோர் திருநோக்குப் படிந்த கோயில்களுக்கும் உண்டு. மலைகள் அழியலாம்; கடல்கள் அழியலாம்; உலகம் அழியலாம்; திங்கள் அழியலாம்; ஞாயிறு அழியலாம், பிறஅழியலாம்; பெரியோர் எண்ணங்கள் அழியா. கோயில் கட்டிடங்கள் அழிந்தாலும் அவைகளைச் சூழ்ந்துள்ள நல்லெண்ணங்கள் அழியா. அவை மீண்டும் ஒருகாலத்தில் கோயிலாகும். கோயில் கல்லன்று; மண்ணன்று; சுண்ணமன்று. அஃது எண்ணம்; நல்லெண்ணம்; சக்திவாய்ந்த எண்ணம். அவ்வெண்ணம் இந்நாளிலும் தியானத்திற் சிறந்த மெய்யன்பர்கட்குப் பெருஞ் சக்தியை - உலகைத்திருத்தும் வல்லமையை – கடவுட்டன்மையை – வழங்கியே வருகிறது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த கோயில் வழிபாடு இடையீடின்றி வளர்ந்து ஓங்கல் வேண்டும். அதற்கு முட்டு நேரின் உலகம் இன்னலுறும். அவ்வின்னலைப் போக்கவும் வழிபாட்டையே கடைப்பிடித்தல் வேண்டும். "புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" அது கண்டு இறைவன் அருள் செய்வான் என்று திருமூலரும், "சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்," என்று அப்பரும், கூறுகிறார். ஆகவே நெக்கு உருகி வழிபட்டால் இறைவர்தம் மனத்தில் புக்குநிற்பார். அன்பில்லாமல் வழிபட்டால் அவர் நம்மைப் பார்த்துச் சிரித்து விலகி நிற்பார். இதனையே "பொக்கம் மிக்கவர் பூவும்நீரும் கண்டு நக்குநிற்பன் அவர்தம்மை நாணியே" என்று அப்பர் அருளியுள்ளார். வழிபாடே தியானயோகம்; தவம். ஆகவே ஆன்றோர்களின் திருவாக்கின்வண்ணம் நாமும் திருக்கோயில் வழிபாடு செய்து இறைவனது திருவருள் பெற்று உய்ந்திடுவோமாக.

வாழ்க சைவ உலகம்!

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(மூன்றும் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்

"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு,

மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்

சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"

வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்

இயற்றியது.

---

[மலர் 12. இதழ் 11-ன் தொடர்ச்சி]

ஆடலரசர் மகிழ்தில்லை யாயி ரக்கால் மண்டபத்துக் கையா யிரமப் பெருமான்பா லன்பே தங்கத் தம்பாளம், நீடு நாலா யிரத்துடனே நிலவு மைந்நா றுயர்சென்னை நின்ற புகழ்ப் பல் கலைக்கழக நிலையா ராய்ச்சி மாணவர்கள், கூடும் விடுதிக் கையைந்தாய்க் குறிக்கும் நூறு தேவையினிற் குமர குருவி னினை வைநிதங் கொண்டு மாகேசுரபூசை, நாடி நிகழ்த்த வோரி லக்க நம்பர் காசித் திருத்தலத்தில் நற்கா வேரி வேங்கடமா நாதராஜு நினைவினிலே 6

அன்னம் பாலிப் புச்செய்ய வாரு யிரமத் திருப்பதியில் அன்பர் காரி யார்நினைவா லன்ன மாசித் திங்களினி, னன்ன ரளிக்க வுந்தண்டி நாய ஞரை நினைவுகொண்டு நாடு மீன மாதத்தில் நல்கு தற்கும் நூறுநா, றின்னும் பரங்குன் றத்தி லெங்க ளிசர் சோம சுந்தரனுர் இனிய தண்ணீர்ப் பந்தர்நிதி யிரண்டோ டிரண்டா யிரங்காசி, தன்னிற் குறிப்புத் திருத் தொண்டர் சார்சித் திரையி லுணவளிக்கத் தக்க மூவா யிரமன்பு தழைத்த முருகர் திருப்பெயரால் 7

---

(தொடரும்)

கம்பன் கவிநயம்-3 :

# கண்டோர் குறையும் - கம்பர் நிறையும்

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், எம். ஏ.,
412. இடையர் தெரு, தஞ்சாவூர்.



பல இடங்களில் பல்வேறு நிலைகளில் கூறியவற்றைத் தொகுத்துக் கூறுவதும், ஓர் இடத்தில் கூறியதை மீண்டும் மீண்டும் கூறிவருதலும் கம்பரது நாவண்ணங்களில் ஒன்றாகும். அத்தகைய திறம் ஒன்றனைக் கீழே காண்பாம் :

இலக்கிய நாயகன் இராமன் மிதிலை மாநகரில் வில்லொடித்து வாகை சூடினன். நிபந்தனையின்படி சீதையை ஏற்கும் உரிமை பெற்றனன். இத்திருமணத்திற்கென அயோத்தி நகரினின்று போந்த தயரதன் போன்றாரை எதிர் கொண்டு அழைத்து வருகின்றான். இராமன் நாணிறுத்த செய்தி கேட்டு நங்கைய ரெல்லாம் இவ்வீர மகனைக் காண வழிமருங்கெலாம் வந்து குழுமினர். அவர்கள் அவனழகைக் கண்டு மகிழ்ந்த நிலையை நயம்பட அமைக்கின்றார் கம்பர். கண்டோர் திறத்தில் குறை இருப்பது போலக் காட்டித் தம்சொல்வண்ணத்தால் நிறைவு கூட்டி நல்லின்பம் பயக்கின்றார்.

வைத்த கண் வாங்காமல் வரிசிலை யண்ணலைக் காண்கின்றனர் கன்னியர். அந்தமில் அழகனும் இராமனுடைய தோள், தாள், கை எனும் உறுப்புக்களின் அழகைக் கண்ட அவர்களுடைய கண்கள், அவ்வவ் உறுப்புக்களிலேயே ஊன்றி விட்டனவாம்; உளம் ஒன்றிவிட்டனவாம். ஒன்றியமையாலே அவ்வொரு உறுப்பையே முடியக் காணவும் கூடுதில்லையாம். அவ்வுறுப்பையே முழுதும் காணாத போழ்து வேறு உறுப்புக்களைக் காணுமாறு யாங்ஙனம்? எனவேதான் ஒண்கணார்தம் கண்களெல்லாம் முதற்கண் கண்ட உறுப்புக்களிலேயே பதிந்து நிலை பெறலாயின என்கிறார்.

தோள் கண்டார், தோளே கண்டார்; தொடுகழல் கமலம் அன்ன
தாள் கண்டார், தாளே கண்டார்; தடக்கை கண்டாரும் அஃதே;
வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்.

(பால. உலாவியற் படலம் - 19)

ஒவ்வொரு உறுப்பின் ஒட்பத்திலும் நங்கையர் கண்கள் ஈடு பட்டமையாலும், ஈடுபட்டமையால் பிறிதொன்றிற் செல்லாமை யானும் எவரும் இராமனது அழகு வடிவினை முடியக் காண வில்லையாம்.

இப்பாடலில் தோள், தாள், கை என்ற மூன்றை மட்டும் கூறினரே யன்றி, அழகுக்குச் சிறந்த உறுப்பாக அமையும் 'அன்றலர்ந்த செந்தாமரை முகத்தினைச்' செப்பினரில்லை; அம்கண் அழகன் எனப் பல்இடங்களிலும் இராமனைப் பாராட்டும் பைந் தமிழ்க் கம்பன் இந்த இடத்தில் கண்ணழகைக் குறிப்பிட்டா ரில்லை. அங்ஙனமே குறிக்காது போயினும், குறிப்பிடும் உறுப் புக்களில் ஒன்றையோ இரண்டையோ, அன்றி நான்கு ஐந்து உறுப்புக்களை உரைத்தாருமில்லை. மூன்றே உறுப்புக்களை அதிலும் தோள், தாள், தடக்கை மூன்றை மட்டுமே எடுத்தியம் புவானேன்! இதனை ஆராயின் இதன்கண் அமையும் நலமும் நயமும் காண்டல் கூடும்.

தோள், தாள் போன்ற உறுப்பைக் கண்டவர்கள் பிறி தொன்றினைக் காணும் பெற்றி யற்றவராய் அமைதற்குக் காரணம் அவ்வுறுப்புக்களின் அழகும் அருமையுமே எனலாம். அழகு என்பதைவிட அதன் அருமையும் பெருமையுமே எனக் கூறினும் மிகையாகாது. இராமனது தோற்றத்தைக் காணு முன்னரே, அவனது ஏற்றத்தை அறிந்த நங்கையர் அவனை நேரிற் கண்டதும் அருஞ்செயல் புரிந்த அவனது அங்கங் களையே காணமுற்பட்டனர் எனலாம்.

தீயவளை அழித்தொழித்த ஆண்மையும், நன்மகளிர் இரு வர்க்கு நல்வாழ்வு தந்த அருளுணர்வையும் அறிந்த அரிவையர், அவ்வாண்மையாளனை – அருளாளனைக் கண்டதும் இருதிறச் செயல் புரிந்த மூவுறுப்புக்களையே முதற்கண் கண்டனர்; இதனைப் பாட்டில் அமைந்த முறைவைப்பே (தாடகைவதம்;

அகலிகை சாபந் தீர்த்தல்; சிவதனுசை முறித்தல்) முழுதும் உணர்த்தும் எனவே செயற் சிறப்புணர்ந்தே - செயலை நினைந்த செயலுக்குரிய உறுப்புக்களை உற்று நோக்கினர்; உளம் ஒன்றினர் எனலாம்.

இராமனின் அழகை, அப்படி இப்படி என்றெல்லாம் அடுக்கிச் சென்றாரில்லை; வழக்கம் போல உவமை பல ஓதினாரு மில்லை; இராமனின் உருவும் திருவும் உண்டு விழுங்கும் கண்கள் வேறொன்றில் ஈடுபடுமோ என வினவினாருமில்லை. ஓர் அங்கத்தைக்கண்ட கண்கள், வேறு அங்கத்தைப் பார்க்க முற்படாதவாறு, அங்கமனைத்தும் துங்கமுற நிறைவுடனும் பொலிவுடனும் காட்சியளிக்கின்றனவாம். அவற்றுள்ளும் இம் மூன்று உறுப்புக்களையே - மூன்று உறுப்புக்களை மட்டுமே கூறுதற்குரிய காரணம், பொலிவோடு வலிவும், அழகோடு அருமைப்பாடும் அமையப்பெற்றமையே எனக்கூறவில்லை - உணருமாறு செய்துள்ளார். யார்? கம்பர்!

ஆண்மையைப் பறைசாற்றி நிற்பன அணிமணித் தோள்களே! அதிலும் அண்ணலின் தோள்களோ 'பொருப் புறழ் தோள்', 'சுந்தர மணிவரைத் தோள்', 'வில்இற நிமிர்ந்து வீங்கும் வரைத்தடம் தோள்', ஆண்மைக்கும் அழகிற்கும் நிலைக் களனாய நீண்ட மலையொக்கும் நெடுந்தோள். இத்தகைய திண் தோளைக் கண்ட கண்கள் கருத்திழந்து உறுப்போடு ஒன்றினவாம்; அழகின் ஆழத்திலே அமிழ்ந்து விட்டனவாம். இது வன்றோ தோள். தீயளாம் தாடகையை அழித்த சிறப்புடையது எனக் கண்கள் ஒன்றினவாம். தோளழகில் மங்கையர் மனதைப் பறி கொடுப்பானேன்?

தாடகை எனும் தீய அரக்கியை இராமன் கொன்ற செய்தியை மகளிர் கேள்வியுற்றிருந்தன ரன்றோ? அவனைக் காணு நிலை நேர்ந்ததும், அவனது அச்செயல் நினைவிற்கு வர, அச் செயல் புரிந்த தோள்களைக் கண்டு - தாடகையைக் கொல்ல உதவிய தோள்களன்றோ இவை எனவியந்து மயங்கி நின்றனர் மங்கையர்.

தாடகைமீது தயரதன் மைந்தன் அம்பு தொடுத்த ஆற்றலைக் கூறமுற்பட்ட கம்பர்,

சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னாள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்கா(து) அப்புறம் கழன்று........
... ... .... ... .... ....போயிற் றன்றே
(பால. தாடகைவதை - 71)

என்கிறார். இன்னும் தாடகையின் மார்பை உருவி, அடுத்து நின்ற மரத்தை உருவி, அப்பால் மலையை உருவி இறுதியாக மண்ணையும் உருவிப் போனதாம்.

உலையுருவக் கனலுமிழ்கண் தாடகைதன் உரம் உருவி,
மலையுருவி, மரம் உருவி, மண்ணுருவிற்று, ஒருவாளி
(பால - குலமுறை - 26)

தாடகையை அழித்த அவன் தோள்வலிமையே பாட்டில் முதற் கண் இடம் பெற்றுளது.

அடுத்து அவனது தாள்நிலை கண்ட நங்கையர் நீர்மை நவிலப்படுகிறது. கல்லாய்க் கிடந்த அகலிகையின் சாபத்தைத் தன் திருவடி தீண்டுதலால் இராமன் நீக்கியருளியமை யறிந்த மகளிர், அவனைக் கண்ட ஞான்று, கல்லுரு நீக்கிக் கருணை புரிந்த கால்களைக் காண்கின்றனர்; கண்டு வியந்து நிற்கின் றனர். முன்னை நிலையினைப் பெறச் செய்த திருவடிகளே இவை என எண்ணி இறும்பூது எய்தினராம் இளநங்கையர்.

கல்லுருவில் இருந்த அகலிகை பண்டே போற் பெண்ணுரு பெறச் செய்த திருவடித் திறத்தைக்,

கண்ட கல்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ,
... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ...
பண்டை வண்ணமாய் நின்றனள் (பால - அகலிகை - 71)

எனக் கம்பர் கழறுவது காண்க.

ஆண்மைக்குரிய தோளும், அருளுக்குரிய திருவடிகளும் விளைத்த செயற் சிறப்பினை விசுவாமித்திரரும் வியந்து போற்று வதாகக் கம்பர் கூறுகிறார்.

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்; இனிஇந்த உலகுக் கெல்லாம்
உய்வண்ணம் அன்றி, மற்ருேர் துயர்வண்ணம் உறுவ துண்டோ?
மைவண்ணத்(து)அரக்கி போரில்,மழைவண்ணத்(து) அண்ணலே!உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்; கால்வண்ணம் இங்குக் கண்டேன்
(பால - அகலிகை - 82)

என்கிருர். தாடகை வதத்தில், 'தீயோரை அழிக்கும்' இராமனின் 'கைவண்ணம்' கண்டவர், அகலிகையின் சாப விமோசனத்தில் அவனது 'நல்லோரைக் காக்கும்' 'கால்வண்ணம்' கண்டனராம், கோசிகமாமுனி. முன்னதில் முனிவரின் அகிம்சா நெறியின் நீர்மை காணப்படுமாப் போன்றே, பின்னதில் அறிவு நீங்கிய - அறம் பிழைத்த - ஆண்மையின் வஞ்சமே பெண்மையின் வீழ்நிலக்குக் காரணமாகிறது. தாடகைப் போர் நிகழ்ந்த அந்த இடத்திலே அவனது கைவண்ணத்தையும், அகலிகை சாபநீக்கம் நிகழ்ந்த இந்த இடத்தில் அவனது கால் வண்ணத்தையும் கண்டதாகக் கூறுகின்ருர் முனிவர்.

கன்னிப் போரும் (தாடகைப் போர்) கல்லுரு நீத்தலும் (அகலிகை சாபநீக்கம்) பின்னர் நடக்க விருக்கும் பெருஞ் செயலுக்கு முற்குறிகளாக அமைகின்றன எனின் மிகையாது.

சில மகளிர் அண்மையில் சிலயொடித்து, சீதைக்கு அருளியதை நினைக்கின்ருர்கள். உடனே வில் முறித்த கைகளைக் கண்டு வியந்து மெய் மறக்கின்றனர். வீரன் வில்லிறுத்த திறத்தை,

தடுத்திமை யாமல் இருந்தவர், தாளில்
மடுத்தது(ம்) நாணுதி வைத்தது(ம்) நோக்கார்;
கடுப்பினில் யாரும்அ றிந்திலர்; கையால்
எடுத்தது கண்டார், இற்றது கேட்டார். (பால. கார்முக - 34)

என விளம்புவார் கம்பர். வில் இறுத்த வேகத்தை அப்படியே கவியில் வடித்தெடுத்துள்ளார் கம்பர்.

தாடகையைக் கொன்றதைக் குறிக்கும் போது தோளையும் (புயவலி); அகலிகைக்கு அருளியதைக் குறிக்கத் தாளையும், (கழற்றுகள் கதுவ) சீதைக்குச் சிறப்பருளியதைக் கூறுங்காலே

கையையும் (கையால் எடுத்தது) கூறும் நலம் பராட்டற்பாலது; நடந்த முறைப்படியே மூன்றையும் நிரல்பட அமைத்த நயமும் கண்டுணரற் பாற்று.

இன்னணம் தோள் கண்டவர் தோளேயே நோக்கி இன்புற; தாள் கண்டவர் தாளேயே கண்டு களிக்க; கையைக் கண்டவரும் கைகளேயே கண்டு வியக்க - நங்கையர் நிலே இருந்ததாகக் கம்பர் இயம்புகின்ருர். இயம்பு நிலேயில்தான் எத்துணே நயம்! பழங் கதை அனேத்தும் நம் நினேவில் வந்து நல்லின்பம் பயக்கின்றன. நிரல்பட அமைத்த முறையும் அருமையுடைத்து; ஆண்மையையும் அருளேயும் இணேத்துக் காண்பதில் இணேயில் இன்பம் எழுந்து நிற்கக் காண்கிறேம்.

கம்பர், கண்டோர் திறம் கூறி வருகையில், அந்தமில் அழகனின் வடிவினே நங்கையர் காண்பதில் குறை அமைவதாகக் காண்கிறேம் - காரணம்: வடிவினே முடியக் கண்டார் களில்லே; அங்கங்களேயும் முழுதும் கண்டார்களில்லே. இஃது எடுத்த எடுப்பில் எழும் எண்ணமாகும். ஆனல் ஆழ்ந்து நயம் காணுங்காலே, கம்பர், கண்டோர் (கன்னியர்) திறத்தில் அமையும் குறை போக்குமாற்ருன் கவிநயம் அமைத்து, முன்னேய நிகழ்ச்சிகளே நினேவு கூறி, நிறைவு படுத்துவதைக் காண்கிறேம்.

இவ்வண்ணம் இராமன் கைவண்ணமும் கால்வண்ணமும் கண்டோர்பால் அமையும் குறை, கம்பரது கவிவண்ணத்தால் நிறைவு பெறும் நயம் உணரத்தக்கது.



# சிவப்பிரகாசரும் திருக்குறளும்

வித்துவான். திரு. க. மு. துரைசாமி அவர்கள்,
சென்னை-23

---

பொய்யில் புலவரின் பொருளுரையைப் பொன்னேபோல் போற்றித் தத்தம் நூற்களுள் ஆண்டுள்ள புலவர் எண்ணிலர். அத் தகைய புலவர் பெருமக்களுள் முதற்காலப் புலவரை விடுத்துப் பிற்காலப் புலவர்களுள் ஒருவராகிய துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் திருக்குறளினின்றும் தம் நூற்களில் எடுத் தாண்டுள்ள பொன்மொழிகளை ஒருசிறிது ஆய்வதே இக்கட்டுரை யின் நோக்கம்.

துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள்தான் முதன்முதல் சிவப்பிரகாசர் என்ற பெயருடன் தமிழ்நாட்டில் திகழ்ந்தவர் எனத் தெரிகிறது. இப்புலவர் பெருமான் தொண்டை நாட்டின் கண்ணே சிறந்து திகழும் கச்சியம்பதியில் இற்றைக்குச் சுமார் முந்நூறு ஆண்டுகட்கு முன் வீரசைவ சமயம் வீறுற்றோங்கக் குமாரசாமி தேசிகர் என்ற பெரியார்க்கு முத்த மகனாக அவ தாரம் செய்தருளினர். சிவப்பிரகாசர் சிறுவராய்க் கல்வி பயிலுங் காலத்தே தந்தையார் சிவலிங்க ஐக்கியமாயினர். பின்னர் அடிகள் கல்வி கற்கப் பேரவாக்கொண்டு அருணையம் பதியை யடைந்து அளப்பரும் தமிழ் இலக்கியங்களைத் தக்கார் வாய்க்கற்றறிந்து அவற்றிலுள்ள நுணுக்கங்களை மனத்தில்பதிய வைத்துக்கொண்டு அவற்றின் சொற்சுவை பொருட் சுவைகளை எண்ணி எண்ணிச் சுவைத்தார். இலக்கிய அறிவு மேன்மேலும் மிகப்பெற்று ஐந்திலக்கணமும் அறிந்து செய்யுளியற்றும் பேராற்றல் படைத்தார். பின்னர் தமிழ் நாட்டின் பல தலங் களையும் தரிசித்து விட்டுச் செந்திலம்பதியை அடைந்தார். அங்கே அலையெறிவாயிலில் கன்மனதையும் கரைக்கும் ஆற்றல் பெற்று, கண்டார் உள்ளங்கவரும் கோலத்தோடு கோயில்

கொண்டெழுந்தருளியிருக்கும் அருட்கடலாகிய ஆறுமுக அமுதை ஆர்வம் மிக்க கண்களால் கண்டு அளப்பரும் இன்ப ஆழியில் திளைத்தார். இங்ஙனம் சைவநெறி தழைத்தோங்கிய பல தலங்களையும் கண்டு களித்த பின்னர் துறைமங்கலம் என்னும் பதியடைந்து, அண்ணாமலை இரெட்டியார் என்ற வள்ளல் அமைத்துத் தந்த மடமொன்றில் தங்கித் தம் வாணாளைக் கழிப்பாராயினர். இப்பெரியார் பொம்மபுரம் சிவஞான பாலைய சுவாமிகளை ஞானகுருவாகக் கொண்டு தீக்கைபெற்று வீர சைவ சித்தாந்தப் பெருங்கடலின் கரைகண்டுணர்ந்தார். இவரும் இவர்தம் உடன்தோன்றலாரிருவரும் சேர்ந்து முப்பத்திரண்டு நூல்கள் இயற்றியுள்ளார் எனத் தெரியவருகிறது. அவற்றுள் சில- வேதாந்த சூடாமணி; சித்தாந்த சிகாமணி; பிரபுலிங்க லீலை; வெங்கைக் கலம்பகம்; வெங்கைக்கோவை; சோணசைலமாலை; சதமணிமாலை; நன்னெறி முதலியன. இந்நூல்களிலுள்ள செய்யுட்கள் கற்பனை நயம் சிறந்தன. அதுபற்றி யன்றோ அவர் புலவர் குழாத்திடையே "கற்பனைக் கவிஞன்" – "கற்பனைக் களஞ்சியம்" என்ற சிறப்புப் பெயர்கள் பெற்றுள்ளார். சிவப்பிரகாசரது செய்யுட்களில் குறட்கருத்து மலிந்துகிடக்கும் ஒரு சிலவற்றைக் காணலாம்.

சிதாகாசப் பெருவெளியாம் சிதம்பரத்தை யடைந்து, சிவப்பிரகாசர், சிற்றம்பலத்தே ஆனந்தக் கூத்தனை நினைந்துருகி ஆங்குள்ள சமயகுரவர் நால்வரின் அருட்பெருக்கினை யுன்னி யுன்னி உள்ளங்குழைந்து "நால்வர் நான்மணி மாலை" என்னும் நூலை அருளிச்செய்தார். அந்நூலில் "கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர் பாய மெய்ம் மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி நெஞ்சம் நெக்குருகச் செய்யும்" திருவாசகமாம் ஒப்பற்ற வாசகத்தை யருளிய மணிவாசகரைப் பற்றிக் கூறும் 28-ஆம் செய்யுள் வருமாறு.

"பனிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெருநின் அழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறுது பெற்றுற் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே.

அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூர் அன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனுர்
"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்" எனுஞ்
செஞ்சொற் பொருளின் தேற்றறிந் தேனே."

இப்பாடலில்,

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்"

என்ற திருக்குறளைப் பொன்னேபோல் போற்றி எடுத்தமைத் திருத்தல் காண்க. அதே நூலில் 33-ஆம் செய்யுள் வருமாறு:-

"அறத் தாறிதுவென வேண்டா சிவிகை
பொறுத் தானேடூர்ந் தானிடை"யை – மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து"

இப்பாடலில் அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்து ஏழாவது குறள் திரிபின்றி முற்றிலும் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

இனி, சிவப்பிரகாச சுவாமிகளின் சீரிய சித்தாந்த நூலாகிய பிரபுலிங்க லீலையில் வள்ளுவர் வாய்மொழி எங்ஙனம் ஆளப் பட்டுள்ளதெனக் கவனிப்போம். முக்கண் பெருமானெடு சூளுற்ற தேவியார் அங்கண்மா ஞாலத்தில் அல்லமனைக் காண்பான் மாயையை விடுத்தனள். மாயை வந்துதித்த வளநாட்டின் மாண்பினை விளக்கப்புகுந்த அடிகள்,

"பொறைக் கயிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற் கயிற்றின் விருந்தைக் குரவர்சொன்
மறைக் கயிற்றின் மனத்தைத் திருவைநல்
லறக் கயிற்றி னசைப்பவ ரெங்குமே"

என்ருர். இப்பாடலும் "ஒறுத்தார்க்கு ஒரு நாளை யின்பம்' பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்" "அறத்தினூஉங் காக்கமில்லை யதனை மறத்தலினூஉங்கில்லை கேடு" என்ற குறட் பாக்களும் ஒப்பு நோக்கற்குரிய. பின்னர்,

"இரப்பார் வரினேரடி ஞாலமெளிய தன்றிக்
கரப்பார் காக்கும் பொருளன்றென வீகைகற்றே
யுரைப்பா ருரைக்கும் உரையாவும் புகழில் வைத்தோன்
தரைப்பா லுவமை யிலையாகத் தருக்கிவாழ் வோன்"

என்று மாயை பிறந்த வனவசை மாநகரத்தின் வள்ளன்மையை வருணித்தார். இப்பாடல்—

"உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்"

என்ற பொய்யா மொழியின் பொழிப்பேயாகும். மாயை வளர்தற் சிறப்பைக் கட்டுரைக்கப் புகுந்த ஆசிரியர்,

"குழலும் யாழு மினியவெனக் கூருவண்ணமென் கனிவாய்
மழலைமொழிந்தும் உடற்கின்ப மருவவோடி மேல்விழுந்தும்
விழையு மமிழ்தின் மிகவினிமை விளையநுகருஞ் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாள் மோக மீன்றோரை"

என்றார். இவ்வொரு பாடலில்,

"குழலினிது யாழினி தென்பர் தம்மக்கண்
மழலைச் சொற் கேளாதவர்"
"மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

"அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

என்ற மூன்று குறட்பாக்களின் கருத்தும், சொல்லும் அழகுற அமைந்துள்ளதைக் காணலாம். நிமலனடியார் வேண்டுவன வேண்டியாங்கு விரும்பியளிக்கும் பெருந்தகையாம் அல்லமப் பிரபு மண்ணுலகில் தோன்றி மாயையை வென்ற வரலாறு பின்னர்க் கூறப்படுகின்றது. அப்பகுதியில் 56-ஆம் செய்யுள்

"காலையரும்பிப் பகலெல்லாம் போதாயிருந்த காமமலர்
மாலைமலர்ந்து பொரும லொருமாயை நாம மணிவல்லி
மூலையிருந்து புறம்போந்து விரிவெண்ணிலா மென்முற்றத்திற்
பின்மஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்"

என்பதாம். இச்செய்யுளில் எடுத்தாண்டுள்ள சொற்கள் "பொழுது கண்டிரங்கல்" என்ற அதிகாரத்து ஏழாவது குறளாகிய,

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்"

என்ற குறளின் சொற்களேயாகும். விமலைகதி 36-ஆம் செய்யுளாகிய,

"ஆன்றமயல் செய்சையோகத் தன்றித்தவ யோகத்தினு
லீன்றபொழுதிற் றன்மகனை யிருந்துசான்ரோ னெனக்கேட்டுத்
தோன்றுமுவகைக் கடற்படிந்தாள் அஞ்ஞானித்தாய் பசும்பொன்மலை
போன்று வளர்ந்து மருங்குன் மிடிபோக்க வறியா விளமுலையாய்"

என்பதில்,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்ரோ னெனக்கேட்ட தாய்"

என்ற குறட்கருத்து பொலிவுற்றிலங்குகிறது.

இன்னும் சித்தராமையர் கதியில்,

"அகழ்கின்ருர் தமைத் தாங்குறு மகனில மென்ன
விகழ்கின்ருர் தமைப் பொறுக்கு மித்தன்மை யெய்தலினு
னிகழ்கின்ரு ருண்மாதவ முடையோகி நீயென்று
புகழ்கின்ருனென விகழ்ந்தனன் பின்னரும் புகல்வான்"

என்ற செய்யுளில்,

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை"

என்ற குறளின் சொற்களை நயம்பட எடுத்தாண்டுள்ளார். இங்ஙனம் சிவப்பிரகாச முனிவர் வள்ளுவர் வாய்மொழியைத் தம் நூற்களுள் பொன்னே போல் போற்றி எடுத்தாண்டுள்ள இடங்களில் ஒரு சில காட்டினேம்.

---

உ

சிவமயம்

செந்திலாண்டவன் துணை.

## அறிவிப்பு

# செந்தில் முருகப்பிரானுக்கும் சண்முகருக்கும் உலக க்ஷேமார்த்தம்,

# கோடி அர்ச்சனை,

**(16—11—61) காலை 7 மணி முதல் ஆரம்பம்.**

முக்கியமாக ரோகினி, மிருகசீரிடம், திருவாதிரை,
உத்திரம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை,
உத்திராடம், திருவோணம், அவிட்டம்,
ஆகிய நட்சத்திரத்தில் பிறந்தவர்கள்
இந்த அர்ச்சனையில் கலந்து
கொள்வது நலம்.

**சகஸ்ரநாம அர்ச்சனை விகிதம் ரூ. 5—00**

**லட்சார்ச்சனை விகிதம் ரூ. 250—00**

பணத்தை நேரடியாகவோ, தபால் முலமோ, "பொக்கிஷதார், கோடி அர்ச்சனைக்கமிட்டி, திருச்செந்தூர்" என்ற விலாசத்திற்கு அனுப்பலாம்.

——:X:——

# தொல்காப்பியம்

வித்துவான்
**திரு. சி. அ. அனந்தராமன் அவர்கள்**
சின்னப்பம்பட்டி (அஞ்சல்) சேலம் (மாவட்டம்)

---

[மலர் 12, இதழ் 11-ன் தொடர்ச்சி]

## I முன்னுரை:-

இதற்கு முன்னர் "தொல்காப்பியம்" என்னும் தலைப்பில் இருகட்டுரைகளைப் படித்திருப்பீர்கள். முதற்கட்டுரையில் தொல் காப்பியம் பற்றிய முன்னுரை, ஆசிரியர், காலம், நாடு, சமயம், உரையாசிரியர் ஆகிய தலைப்புக்களைக் காணலாம். இரண்டாவது கட்டுரையில் தொல்காப்பியத்தில் யான் கண்ட சில புதை பொருள்களைக் காணலாம். இனி இம்மூன்றும் கட்டுரையில் பொருளதிகாரத்தின் சிறப்பு, தொல்காப்பியம் பற்றி எழுந்த ஆய்வுரை நூல்கள், பிறநூல்கள், முத்தமிழும் அமைந்துள்ள விதம், தொல்காப்பியத்திலிருந்து அறியும் கலைகள், அதில் கூறும் பொருளீடுகள் என்னும் தலைப்புக்களில் சிலவற்றைக் கூறி எனது இவ்வாராய்ச்சிக் கட்டுரையை முடித்துக் கொள் கிறேன்.

## II பொருளதிகாரத்தின் சிறப்பு:-

பொருளதிகாரத்தின் பெருமையை இறையனுர் களவியல் உரை பின்வருமாறு கூறுகிறது. "அரசனும் புடைபடக்கவன்று என்னை? எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருள் அதிகாரத்தின் பொருட்டன்றே" என்பது. எனவே பொருளின் பெருமையை இதனல் உணரலாம். அகத்திணை இயலை அக் கால மக்களின் காதல் வாழ்வு, நிலம், பொழுது பாகுபாடு, முதல்கரு உரிப்பொருள்கள் ஆகியவைகளை எடுத்துக் காட்டும் ஓர் நிலநூல் என்று கூறலாம். புறத்திணை இயலை வீரர்களின்

மேம்பாடு, அரசன் படைகளை இயக்கும் முறை, அரண், போர், நடுகல் நடுதல் ஆகிய பலவற்றையும் கூறலான் அரசியல் நூல் என்பதில் ஐயமில்லை. களவு, கற்பு இயல்களை ஒத்த குலனும் பண்பும் கல்வியும் உடைய காதலர் தம்முட் புணர்ந்து பின் மணம் செய்து இல்லறக்கிழமை நடாத்தும் திறத்தைக் கூறும் உலகியல் வாழ்வு நூலாகும். மெய்ப்பாட்டியல் மக்களின் உணர்ச்சியை விளக்கும் உடலின்கண் தோன்றும் மெய்ப் பாட்டின் தன்மையைக் கூறும் ஒன்பான் சுவையுடன் உடல் மயிர்சிலிர்க்க வைக்கும் உன்னதப் பெருநூலாம் உடல்நூலாகும். உவமை இயல் உலகியற் பொருள்களைக் கூர்ந்து பகுத்து உணர்கின்ற பகுத்தறிவினைப் பகர்ந்து உயர்வு தாழ்வுப் பண்பு கள் எவையென ஆய்ந்து வகுக்கும் காணாத பொருள்களை எல்லாம் விளக்கும் ஒப்பற்ற தனிப்பெரும் நூலாகும். செய்யுள் இயல், ஓசைகளின் பல்வேறு நிலைகளை எடுத்துக்கூறிச் செவிப் புலனுக் கேற்ப நாவசைத்துப் பாகுபடுத்திக் காணும் இசை நூலாகவும் இருபான் வண்ணங்களையும் எழுநிலத்தையும் எண் வகை வனப்பினையும் மந்திர மொழியினையும் எடுத்தியம்பும் ஒலி நூலாகவும் மிளிர்கின்றது. பொருளியல் பொருள் அதி காரம் முழுமைக்கும் ஓர் புறனடையாக அமைந்து இன்றியமை யாச் சிறப்பிற்றாய் இலங்குகிறது. மரபியல் உயிர்ப் பொருள் களின் தன்மையை ஆய்ந்து ஆண்பெண் பகுப்பு முறை, அறிவியல் பகுப்பு, உலகத்தின் உயர்வு ஆகியவற்றை ஆய்ந் துரைக்கும் அரும்பெரும், அறிவியல் (Science) நூலாகும். இவ்வாறு பொருள் அதிகாரத்தின் பால் உள்ள ஒன்பது இயல் களும் ஒன்பது பெரும் நூல்களாகும். அதனை யாவரும் தெள்ளிதின் கற்று உணர்ந்து அதன்படி நம்வாழ்க்கை நடாத் தப்பயிலுதல் வேண்டும்.

III ஆய்வுரை நூல்கள்:-

தொல்காப்பியம் பற்றி எத்துணையோ ஆய்வுரை நூல்கள் தோன்றியுள்ளன. உதாரணமாக அதற்கு உரையாக அமைந் திருக்கும் நூல்கள் ஒவ்வொன்றும் சிறந்த ஆய்வுரை நூல்க ளாகக் கொள்ள வேண்டும். அடுத்து சிவஞான முனிவரால் "தொல்காப்பியப் பாயிர விருத்தி" என்ற நூல் சிறப்புமிக்க

ஆய்வுரை நூலாகக் காணப்படுகிறது. தற்காலத்தே ரா. வேங்கடராஜுலு ரெட்டியார், பா. வே. மாணிக்க நாயக்கர், துடிசை கிழார் அ. சிதம்பரனுர், மு. ராகவ அய்யங்கார் போன்றவர்களும் திரு. ஞா. தேவநேயப்பாவாணர் அவர்களும் சிறந்த ஆய்வுரை நூல்களை வெளியிட்டு உள்ளார்கள். அவற்றை யெல்லாம் வாங்கிப்படிப்பது நமது தலையாய கடமையாகும்.

## IV பிறநூல்கள்:–

தொல்காப்பியம் என்னும் கடலுக்கு உள்ளே முத்தும் பவளமும், மணியும், ரத்தினமும் ஆங்காங்கே காணப்படுகின்றன. அதாவது மறை, தவம், பட்டாங்கு, ஒழுக்கம், உளம், கணிதம், வானம், சொல்லியல், தருக்கம் ஆகிய பல நூல்களின் அருமையை ஆங்காங்கே சிதறித் தெளித்துள்ளார். அவற்றை ஒவ்வொன்ருகச் சிறிது காண்போம்.

1. **மறைநூல்:** மறை நூலாவது மொழியின் முதற்கண் தோன்றுவது. “நரம்பின் மறைய” என்றும் “மறையென மொழிதல் மறையோர் ஆறே” என்றும் கூறும் பகுதிகள் இதற்குச் சான்ருகும்.

2. **தவநூல்:** “நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்” என்று கூறுவதும் “காமம் சான்ற கடைக்கோட் காலை” எனத் தொடங்கும் நூற்பாவில் “சிறந்தது பயிற்றல்”எனக் கூறுவதும் இதற்கு எடுத்துக்காட்டாகும்.

3. **பட்டாங்கு நூல்:** இலக்கணக் குறியீடுகளும் உயிர், மெய், உயிர்மெய் என்ற பாகுபாடுகளும் ஆறறிவு உயிர், மறுவில் செய்தி முவகைக் காலம் உணரும் அறிவன் தேயம், நிலம் நீர் தீவளி விசும்பின் கலந்த மயக்கம் உலகமாதலின் எனவும் கூறும் நூற்பாக்களும் இதற்குச் சான்ரும்.

4. **ஒழுக்க நூல்:** புறத்திணை இயலில் கூறும் மூன்றன் பகுதியும், அறம், பொருள், இன்பம் பற்றிக் கூறுவதனையும் ஒழுக்க நூலின் பாற்பாடுத்தலாம்.

5. **உள நூல்:** மெய்ப்பாட்டியலின் கண் காணப்படும் நூற்பாக்கள் அனைத்தும் உள்ளத்து உணர்ச்சியைத் தெள்ளிதின் உணர்த்த வல்ல உளநூலாகும்.

6. **கணித நூல்:** அளவு, நிறை, எண்ணுப் பெயர்கள், தொகை மரபு, உயிர் மயங்கியல், குற்றுகரப் புணரியல், தாமரை, வெள்ளம், ஆம்பல் போன்ற எண்ணுச் சொற்கள் ஆகியவை காணப்படுதலால் கணித நூலாகும்.

7. **வான நூல்:** நாள், கோள், ஞாயிறு, திங்கள், ஓரை, சிறுபொழுது, பெரும்பொழுது ஆகியவற்றைக் கூறுவதால் வானநூலின்பால் படுத்தலாம்.

8. **சொல்லியல் நூல்:** பெயரியல் வினையியல், எச்சவியல் அறுவகைத் திரிபுகள், மூவகைக் குறைகள், வினைபயன் மெய் உருவின் உவமங்கள் ஆகியவை சொல்லின் இயல்பைக் கூறும் சொல்லியல் நூலாகும்.

9. **தருக்க நூல்:** புறத்திணை இயலில் காணும் "தாவில் கொள்கை" எனத் தொடங்கும் நூற்பாவில் 'மிகுதிப் படுத்தல்' என்பது தருக்க நூலின் கருத்தைச் சார்ந்ததாகும். இவ்வாறு இது பல நூல்களின் நுண்பொருளை தன்னகத்தே அடக்கி உள்ளதை ஆராய்வார் அனைவரும் அறிவர்.

## V முத்தமிழின் மேன்மை:-

தொல்காப்பியத்தே தமிழ் மொழியின் பிரிவான இயல், இசை, நாடகத் தமிழ் நூல்களின் சிறப்பை ஆங்காங்கே காணலாம். இயற்றமிழினைத் தொல்காப்பியம் என்னும் இந்நூலே உணர்த்துகின்றது. இசைத் தமிழை "அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்......நரம்பின் மறைய" என்னும் நூற்பாவும் "செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ, துறையமை நல்யாழ்த் துணைமை யோர் இயல்பே," "பாணன், பாடினி, பாட்டின் இயல பண்ணத்தி" என்னும் தொடர்களும் விளக்குகின்றன என்பதை எளிதின் உணரலாம். நாடகத் தமிழை "நாடக வழக்கினும்

உலகியில் வழக்கினும்'' என்னும் நூற்பாவும், கூத்தர், பாணர், பாடினி, விறலி ஆகியோரின் இயல்புகளும் நாடகத் தமிழ் பற்றிய குறிப்புக்களை நவில்கின்றன.

## VI தொல்காப்பியக் கலைகள் :-

தொல்காப்பியம் என்னும் இம்மாபெரும் இலக்கணத்துள்ளே சிற்பம், நெசவு, வாணிகம் முதலான கலைகளைப் பற்றி ஆங்காங்கே காணப்படுகின்றன. சிற்பத்தைப்பற்றி முழுமுதல் அரணம் ஆரெயில் மதிற்குடுமி ஆகிய தொடர்கள் குறிப்பிடுகின்றன. உழவினை ஏரோர் களவழி என்னும் தொடரால் அறியலாம். கைத்தொழில் பற்றி தாழ், வேல்; வாள், கழல், தோல் (கேடயம்) குடை, தேர், யாழ், இழை, துடி, பொன் முதலிய பெயர்களாலும், ஊழணி தைவரல் என்னும் தொடராலும் அறியலாம். நெசவினைப்பற்றி உடைபெயர்த்து உடுத்தல், என்பதின் மூலம் நெவு அக்காலத்து சிறந்து இருந்தது என்பது சொல்லாமலே விளங்கும். வாணிகம் பற்றி "முந்நீர் வழக்கம் மகடுஉவொடு இல்லை'' என்னும் நூற்பாவும், "ஊர்தல் போகல் ஒழுகல்'' எனத் தொடங்கும் உரிச்சொல் பற்றிய சூத்திரமும் அக்காலத்து மக்கள் நடத்திய கடல் வாணிபத்தை உணர்த்தும், "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு,'' என்பது பழமொழி.

## VII தொல்காப்பியத்தில் காணும் பொருளீடுகள்:-

தொல்காப்பியத்தினின்று காமம், வருணனை, போர், பாடாண் முதலிய பொருளீடுகளை அறிய முடிகிறது. காட்டாக சிலவற்றைக் காண்போம். காமம் பற்றிக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை, மடல் ஏறுதல் முதலியனவும், வருணனைபற்றிக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனவும், போர்பற்றி வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை வாகை என்பனவும், கருதல் பற்றி பெருங்காஞ்சி, முதுகாஞ்சி, மறக்காஞ்சி, வஞ்சிக்காஞ்சி மகட்பாற் காஞ்சி, கையறுநிலை முதலாயினவும், பாடாண்பற்றி உலா கொற்றவள்ளை, இயன்மொழி வாழ்த்து, ஆற்றுப்படை, கடவுள் வாழ்த்து, வாயுறை, செவியறிவுறூஉ, புறநிலை, ஆகியனவும், செய்யுள்பற்றி எழுநிலம், எண்வகை வனப்பு, பாட்டு, உரை, நூல், பிசி, வாய்மொழி, அங்கதம் முதுசொல் முதலா

யினவும், நூல்வகை பற்றி பண்ணத்தியும் "பாவகை, ஆசிரியம், கலிவஞ்சி, துறை, விருத்தம், வெண்பா, மருட்பா, பரிபாடல் முதலியனவும் இந்நூலுள்ளே காணப்படும் பொருளீடுகளாகும்.

## VIII முடிவுரை:-

இத்துணைச் சிறப்புக்களான் இயன்ற இத்தொல்காப்பியம் என்னும் அரும்பெரும் நூல் தொட்டனைத்தூறும் மணற்கேணி போலப் பயில்வார்க்கு இன்பம் பயப்பதாய் விளங்குகிறது. இடைச்சங்க காலத்தில் ஏற்பட்ட கடற்கோளால் எத்துணையோ நூல்கள் அழிந்திருப்பினும் இந்நூல் அழியாமல் இருப்பதற்குக் காரணம் தமிழக மக்களின் தவப்பேறேயாகும். ஆகவே இதனை நன்கு கற்று உணர்ந்து நாவலந்திவில் உறையும் நம் தமிழ் மக்கள் அனைவரும் நற்பயன் அடைவார்களாக. வணக்கம்.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!!
வாழிய பாரதமணித்திருநாடு!!!

# குறிக்கோள்

சைவப்புலவர், பண்டித,
திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,
சமயச் சொற்பொழிவாளர், நாகர்கோயில்,



மானிடப்பிறவி மாண்புடையது. அப்பிறவியே மேலானது. எத்தனையோ பிறவிகளில் நமக்கு அடைய முடியாத பலவகை இன்பங்களையும் பெற்று, அறிவின் நுட்பத்தையும் கண்டு மகிழலாம். எண்ணற்ற பொருட்களைக்கண்டு அதனியல்பையும் படைக்கப்பட்ட இறைவனின் பெருங்கருணையையும் வியந்தின் புறலாம். நமது மனம் பலவிதமான நன்மைகளை அடைவதிலே கண்ணுக இருக்கின்றது. அவைகள் எல்லாவற்றிலும் இறைவனை அடைவதிலே நம் மனம் செல்ல வேண்டும். அதனையே நம் வாழ்க்கையின் குறிக்கோளாக அமைத்துக் கொள்ள வேண்டும். இதை மக்கட் பிறவியிலேதான் அடைய முடியும். ஆகவேதான் அப்பர் பெருமானும் "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்றருளியுள்ளார். இதிலிருந்து மனிதப் பிறவியின் மாண்பு எவ்வளவு சிறந்ததென்று நாம் அறிந்து கொள்ளலாம்.

இப்பிறவி கிடைப்பதற்கு முன்னுல் நாம் பல பிறவிகளைப் பெற்ருேம். இந்த மனிதப் பிறவி நம்முடைய "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது" என்று மணிமேகலை ஆசிரியரான சீத்தலைச் சாத்தனரும், "வினைப்போகமே ஒரு தேகங் கண்டாய் வினைதானெழிந்தால் தினைப்போதளவும் நில்லாது" என்று பட்டினத்தடிகளும், "முன்பு செய்தகன்மம் இங்கு இவற்றிற்கேது, தேறு நீ இனிச் செய்கன்மம் மேல்உடற் சேரு" மென்றும், "விடப்படு முன்னுடம்பின் வினை இந்தவுடல் விளைக்கும்" என்றும் சைவ சாத்திரங்களில் சிறந்த சிவஞான சித்தியாரில் அருணந்தி சிவாசாரியார் அருளியுள்ளார். வினைக்கு

வந்த இந்தவுடம்பைப் பெரிதென எண்ணி வினையைத் தீர்த்துக் கொள்ள அதைக் காத்து அதனால் அடையும் பெரும்பயனை நாம் அடைய முயல வேண்டும். உடம்பினுள் உயிரிருக்கிறது. உயிரினுள் இறைவன் வீற்றிருக்கிறான். இதனையே திருமூல நாயனாரும் "உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன் உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே." என்றருளியுள்ளார். மனத் தூய்மையுடையவனாக இருந்தால் அவன் உள்ளத்தில் இறைவன் வீற்றிருப்பான். நமது உடல் கோயிலாகவும் அமைந்துள்ளது. இதனையே அப்பர் பெருமானும் "காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக" என்றருளிப் பூசனை ஈசனார்க்கு காட்டினேம் என்று தம் வாழ்க்கையில் எப்போதும் இறைவனை மனத்தால் தியானித் கொண்டிருப்பதைத் தம் வாழ்வின் குறிக்கோளாக வைத்துக் கொண்டார் என்பதை அறிகிறோம்.

நம்முடைய உடம்பு அழியும் தன்மையுடையது. வள்ளுவர் பெருமானும் "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம் போடு உயிரிடை நட்பு" என்றருளினர். ஆகவே உடம்பினுள் உயிர் இருக்கும் போதே நாம் நல்லவற்றைச் செய்து வாழ வேண்டும். ஒரு தொழிலாளிக்கு வேலை செய்வதற்குள்ள சாதனங்கள் பல இருக்கின்றன. இதைவைத்துக் கொண்டு தேவையான பொருட்களைச் செய்து மகிழ வேண்டும். அது இல்லாமல் சாதனங்களின் அழகைக் கண்டு மகிழ்வதனால் பலனொன்றுமில்லை. அது போல நம்வாழ்க்கையில் இறைத் தொண்டு செய்து வாழ்வதற்காகத்தான் இவ்வுடலை இறைவன் தந்திருக்கிறான் என்றெண்ணி மனம், மொழி, மெய்களால் தொண்டு செய்து வாழ்வதே குறிக்கோளாகக் கொண்டு வாழ வேண்டும்.

நம் மனம் பலவகையானவற்றை நினைக்கும். அதற்கு அளவும் கிடையாது. நம் வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் அறிய முடியாது. பின்னால் எது நடக்கும் என்பதும் தெரியாது. ஆனால் நினைப்பு மட்டும் அளவு கடந்திருக்கும். இதனையே 'ஒரு பொழுதும் வாழ்வதறியார் கருதுப கோடியும் அல்ல பல' என்று வள்ளுவப் பெருமான் அருளியுள்ளார். எண்பது கோடி நினைந்

தெண்ணுவதில் ஒரு சிறிது நேரமாயினும் நம்மையும் நம்மைச் சூழ்ந்த இவ்வுலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் அதனைப் படைத்த இறைவனையும் நினைத்துப் பார்க்க வேண்டும். அவ்வாறு எண்ணினால் இறைவன் நம்மீது கொண்டுள்ள பெருங்கருணை நமக்குப் புலப்படும்.

இறைவனுடைய அருட் செயல்களையும் நாமத்தையும் தினமும் தவறாது எண்ணிவர வேண்டும். ஆன்மாக்களின் பொருட்டு இறைவன் செய்த திருவிளையாடல்களைப் பிறருக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். அவ்வாறு இறைவனை நினையாத நாளையும், அவன் திறத்தினைப் பேசாத நாளையும் பிறவாத நாளாகவே எண்ணி அப்பர் பெருமான் வருந்துகின்றார். ஆகையினால் நாம் இறைவனைப் பற்றி நினைத்த நாட்களே உயிரோடு இருந்த நாளாகக் கொள்ள வேண்டும்.

உலகில் வாழும் மக்கள் அனைவரும் குறிக்கோளுடன்தான் வாழ்கிறார்கள். அது பலவாறாக அமையலாம். ஆனால் எல்லோரும் இறைவனை நினைத்து வாழ்வதையே தம் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அவனை நினைத்தால் அவன் நாம் வேண்டத்தக்கதையறிந்து வேண்டிய முழுவதும் நமக்குத்தந்து நம்மைக் காப்பாற்றுவான். இதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் "இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு இல்லையே" என்றருளியுள்ளார். நம்முடைய குறிக்கோள் இவ்வாழ்விற்கு மட்டும் இன்பம் தரக்கூடியதாக அமையக்கூடாது. செல்லுலகத்திற்கும் பயன்படும்படியாக அமையவேண்டும். இதனை "உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது, செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின், மல்லல் மாஞாலத்து வாழ்வீர் ஈங்கு" என்று சிலப்பதிகார ஆசிரியராகிய இளங்கோவடிகளும் நம் உடல் உள்ளபோதே உய்வதற்குள்ள வழிகளைத் தேடிக்கொள்ள வேண்டுமென்று கூறுகின்றார். "ஒன்றும் நன்றே செய், நன்றும் இன்றே செய், இன்றும் இன்னே செய்" என்று கபிலரகவலில் கூறியதிலிருந்து இறைவனை நினைத்து நல்லறங்களைச் செய்து செல்லுலகத்திற்கு உறுதுணை தேடிக் கொள்ளவேண்டும். அப்பர் பெருமானும் "குறிக்

கோளிலாது கெட்டேன்" என்று தம்முன் அனுபவங்களைக் கூறுவதிலிருந்து நாம் தெரிந்து நடந்து கொள்வது என்ன வெனில் பெரும்புலர்க் காலைமுழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி அரும் போது மலர்கள்தூவி, ஆர்வமுடன் இறைவனை வழிபடுவதும் சிவபுண்ணியங்களைச் செய்து வாழ்வதும் நமது குறிக்கோளாக அமைய வேண்டும்.

நம்மிடையே சாதிசமயப் பூசல்கள் பலவுள்ளன. அவைகளை நாம் நீக்கி எல்லோரையும் ஒன்று சேர்த்து இறைவழிபாட்டில் கலந்து கொள்ளச் செய்யவேண்டும். ஞானநெறியில் நின்று வழிபடுவார்க்குச் சாதிகுலம் என்பன தடையாக இருக்கும். ஆதலின் அவைகளை நீக்குவதே நமது குறிக்கோளாகும். மாணிக்க வாசகப் பெருமானும் "சாதி குலம் பிறப்பு என்னும் சுழிப்பட்டு தடுமாறும் ஆதமிலி நாயேனை ஆட்கொண்டாய்" என்றருளியதிலிருந்து வழிபடும்போது இறைவனுடைய சந்நிதியில் எல்லோரும் ஒன்று என்ற குறிக்கோளுடன் வழிபட வேண்டும்.

பண்டைநாளில் குழவி இறப்பினும் தசையாகியதடி பிறப்பினும் இவை வாளினுல் வெட்டப்பட்டு இறந்தாலன்றி நலமில்லை யெனக்கருதி அவற்றை வாளினுல் வெட்டி அடக்கம் செய்வார்கள் என்பதைப் புறநானூற்றில் சேரமான் கணைக்காலிரும்பொறை என்னும் மன்னன் வாயிலாக நாம் அறிகிறோம். அக்கால அரசர்கள் வீரவாழ்க்கையைத் தங்கள் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பது புலனுகிறது. ஆகவே நாமும் நம்முடைய வாழ்நாளில் சிவகதையைக் கேட்டல், படித்தல், பசித்தவர்க்கு அன்னம் கொடுத்தல், குருமொழியைக் கேட்டல் மெய் சொல்லிவாழ்தல், புலாலை நீக்கல், இறைவனை இமைப்பொழுதும் நெஞ்சைவிட்டு நீங்காமல் நினைத்தல் முதலானவை களை நித்தமும் குறிக்கோளாக் கொள்ள வேண்டும்.

மேற்கூறியவைகளைப் பின்பற்றினுல் நாம் பிறவியாகிய பெருங்கடலை நீந்தித் தனக்குவமையில்லாத ஒப்பற்ற பரம் பொருளின் அடியைச் சார்ந்து பேரின்பம் அடைந்து வாழ்வோம். இதுவே நாம் பிறவியெடுத்ததின் குறிக்கோளாகும். எனவே இவைகளைப் பின்பற்றி வாழ்ந்து வருவோமாக.

---

# சொல்லும் செயலும்

திரு. சிவப்பிரகாசம் அவர்கள்,
குளித்தலை.



அங்கத்தை மண்ணுக் காக்கி
ஆர்வத்தை யுனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப்
பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா
சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதால்
இங்குற்றேன் என் கண்டாயே

—அப்பர் சுவாமிகள்

கவி இயற்றுதலோ அல்லது பொன்மொழிகளோ உதிர்ந்து விட்டால் போதாது.

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். —குறள்

அது போன்று மேற்கூறிய பாட்டைப் பாடி விட்டால் போதுமா? அதன் பயனை அடைய வேண்டாமா? எனவேதான் பெரியோர்கள் மேலே உள்ள பாட்டை மறைவாகப் பாடி வைத்துள்ளார்கள். ஒரு சமயம் ஓர் மனிதன் தன் குழந்தைக்கு உடல் நலமில்லை எனக்கூறி ஒரு சாதுவிடம் மருந்து கேட்கச் சென்றான். அச்சாது அம்மனிதனையும் அக்குழந்தையையும் பார்த்து விட்டுப் பின்னர் மறுநாள் வரும்படி கூறினார். அவனும் தன் குழந்தையை எடுத்துக் கொண்டு மறு நாள் சாதுவைக் கண்டு வணங்கினான். அப்போது சாது உன் குழந்தைக்கு சர்க்கரைப் பொருளைக் கொடுக்காதே; இதோ மருந்து பெற்றுக் கொள் என்று கூறி மருந்தைக் கொடுத்தார். உடனே அவன்

சுவாமி, சர்க்கரையைச் சேர்க்காதே என்று தாங்கள் நேற்றே கூறியிருக்கலாமே என்ருன். சாது உடனே கூறினுர், அப்பா நேற்று வரை என் முன்ருல் சர்க்கரை வைக்கப்பட்டிருந்தது. நான் நேற்றே சொல்லியிருந்தால் இந்தக் குழந்தை என்ன நினைக்கும் தெரியுமா, "அயோக்யன், இந்தக் கிழவனுக்கு வேண்டும்போல் இருக்கிறது. அதனுல் தான் அப்படிக் கூறுகிருன் என்று நினைக்கும்." அதனுல்தான் இன்று கூறினேன். உலகத்தில் வழி காட்டுபவர்களின் பொறுப்பு மிக முக்கியமானது. எனவேதான் மேற்கூறிய பாட்டும் மறைவாக வைக்கப்பட்டுள்ளது. புத்திசாலியாயின் தெரிந்து திருப்தியடைந்து துதித்து இறைவனது பெருமையைக் கூறி இன்புறட்டும் என்ற எண்ணம் தான். அடுத்ததாக இப்பாட்டில் உள்ள மறைபொருள்தான் என்ன? என்ற கேள்வியே முக்கியமாகும். அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை யுனக்கே தந்து-இதையாரிடமாவது கூறிக் "கடைப்பிடி; உனக்கு நல்வழி கிட்டும்" என்று கூறினுல் உண்மையில் கூறுபவனுக்குக் கிடைக்கும் பட்டம் பைத்தியக்காரன் என்பதுதான்.

உண்மையில் அறிவாளிகள் அனைவரும் ஞானிகளும் முனிவர்களும் உலகிற்குப் பைத்தியக்காரர்களாகத்தான் காணப்பட்டனர்; கருதப்பட்டு வந்தார்கள். புராணத்தில் மட்டுமல்ல, சரித்திரத்திலும் அறிவாளிகளுக்குக் கிடைத்த பட்டம் பைத்தியம் என்பதுதான். உலகம் உருண்டை என்று கூறினுன் கலிலியோ. அக்கால மக்கள் அவனை எள்ளி நகையாடினர். கைகளையும் கால்களையும் கட்டி போட்டு இம்சித்தனர். ஸ்டீவன்ஸன் முதன் முதலில் நீராவியினுல் ரயிலையும், கப்பலையும் ஓட்ட முடியும் என்ற போது மனிதனுவது ஓட்டுவதாவது பைத்தியம் உளறுகிருன் என்றனர். ஆனுல் அந்தப் பைத்தியக்காரனின் செயலினுல்தான் இன்று நாட்டை, ஏன் உலகத்தைச் சங்கிலிபோல் இணைத்துள்ள ரயில்களும் கப்பல்களும் நடமாடுகின்றன.

உலகத்தின் இவ்விந்தையான செயல்களைக் கண்டுதான் ஞானிகள் மனிதனை மாயையின் அடிமையென்றனர். போகத்தை வெறுத்தனர். ஆசையை அறுத்தெறிந்தனர். சுடுகாட்டில்

சாம்பலை அள்ளி அள்ளிப் பூசிக்கொண்டனர். அதிலேயே உருண்டனர். புரண்டனர். புறத்தோற்றத்தில் அவர்கள் பைத்தியமாக் காணப்பட்டனர்.

மேல்நாட்டில் மட்டுமல்ல நம் நாட்டிலும் பல ஆயிரம் வருடங்களுக்கு முன்பிருந்தே நாத்திகமும் இருந்தது. சுவாமிகளையோ முனிவர்களையோ கண்டால் ஏளனமாய் எண்ணித் தூற்றிய மக்களும் இருந்தார்கள். எனவேதான் முனிவர்களும் ஞானிகளும் பற்றற்ற நிலையில் காட்டை அடைந்தார்கள். ஏனென்றால் மாயையின் அடிமையாகிய அதற்கு அடிமையாக உள்ள மனிதனை ஞானிகள் அவர்கள் நினைத்ததை ஆக்கிக் காட்ட இயலும். ஆனால் அவர்கள் அதையா செய்கிறார்கள். “ஓர் முட்டாளின் கேள்விக்குப் பதில் என்ன?” வென்று கேட்டால், அதற்கு அறிவாளியின் பதில் ‘ஒரு புன்னகை தான்’ என்றார் ஓர் அறிஞர்.

ஆனாலும் மனிதன் எவ்வளவோ தவறுகளும் செய்கிறான். இருந்தாலும் காலப்போக்கில் மறந்து விடுகின்றான். மறக்கும் சக்திமட்டும் மனிதனுக்கு இல்லையென்றால் உலகம் எப்போதே நரகமாகியிருக்கும் என்று கூறினார் மேல் நாட்டு அறிஞர் ஒருவர். அவர் கூறிய பொன்மொழியில் உள்ள கருத்து எத்தனை ஆழம் நிறைந்தது என்பதனை எண்ணிப் பாருங்கள்.

மனிதன் தன்னை என்னவென்று நினைக்கிறான். அவன் எவ்வளவுதான் முட்டாளாக இருக்கட்டும். தன்னை அறிவாளி என்றுதான் நினைக்கிறான். கண்ணாடி முன் நின்றுகொண்டு தான் அவலட்சணமாக இருப்பினும் அலங்காரபுருடன் என்றே நினைக்கிறான். அதற்கு கீழே கூறப்பட்டுள்ள உதாரணம் தக்க சான்றாகும்.

ஒரு சமயம் பிரம்மா ஒரு மனிதனைக் கண்டார். “அப்பா நீ பொழுது போக வில்லையே என்றும் பொருள் பொருள் என்றும் சதா கவலையுற்றுக் கொண்டிருக்கிறாய். அது தவறு. எனக்குப் பொருள் வேண்டும். எல்லா இன்பங்களையும் அடைய வேண்டும் என்று தேனில்விழுந்த ஈப்போல் ஆகின்றாயே தவிரப்

பேரின்பத்தைக் கிஞ்சித்தும் எண்ணிப் பார்ப்பதில்லை. எனக்கு ஆண்டவன் அளித்துள்ள கடமையைப்பார். பல ஆயிரம் வருடம் எனக்கு ஒரு நிமிடத்திற்குச் சமம். ஒரு பைசா என்பது எனக்குப் பல ஆயிரம் ரூபாய்களுக்குச் சமம்" என்று கூறினுர். உடனே பார்த்தான் அம்மனிதன். "பல ஆயிரம் வருடம் ஒரு நிமிடத்திற்குச் சமமா? பல ஆயிரம் ரூபாய்கள் ஒரு பைசா வுக்குச் சமமா! ஆச்சரியமாக இருக்கிறதே. காலத்தைப் பற்றி நமக்கென்ன கவலை. ஐயா, எனக்கு ஒரே ஒரு பைசா கொடுங்கள்" என்று சட்டென்று கேட்டு விட்டான்.

மனிதனுக்குச் சளைத்தவரா அப்பிரம்மன். ஆகட்டும் அப்பா ஒரே ஒரு நிமிடம் பொறு என்ருர். ஒரு நிமிடம்தான் அவருக்குப் பல ஆயிரம் வருடங்களுக்குச் சமமாயிற்றே: இப்போது என்ன புரிகிறது. மனிதனின் அறிவு எவ்வளவுதான் உயர்ந்ததென் ருலும் கடவுள் சக்தி என்ற ஒன்று அவனை ஆட்டி வைக் கிறதல்லவா?.

இதையெல்லாம் நன்கு அறிந்துதான், பொருள் நிரம்பிய மேலே உள்ள பாட்டு எழுதப்பட்டுள்ளது. மனிதன் தான் அழகன் என்றும் பெரிய பதவியில் உள்ளவன் என்றும் கலெக்டர் என்றும் நினைத்துப் பெருமைப்படும் போது அப்பெரியோர்கள் தங்களை நாய் என்று அழைத்துக் கொண்டார்கள். ஏன்? முடிவில் பட்டம்,பதவி அழகு, ஆசை, ஆனந்தம், அன்பு மகிழ்ச்சி இவை யெல்லாம் இறுதியில் நிலைக்கின்றனவா? கடைசியில்தான் மனிதன் உணர்வு பெறுகிருன். ஆனுல் முனிவர்களோ தாம் உடலைப் பூமியில் பிறப்பித்த போதே தம்மைத் தியாகம் செய்து விடுகிருர்கள்.

எனவே முற்றும் உணர்ந்தவர் குற்றங்கள் உரையார் என்பது போல் கொள்க. இதைக் கூறுவதால் உங்களையும் சாம்பலைப் பூசிக் கொள்ளுங்கள் எலும்பை மாலையாக அணிந்து கொள்ளுங்கள் என்றும் சுடுகாட்டில் புரளுங்கள் என்றும் கூற வில்லை. இல்லறத்தில் இருப்பினும் சரி, துறவறத்தில் இருப் பினும் சரி, பதவியில் இருப்பினும்சரி, ஏழையாயினும் சரி, பணக்

(தொடர்ச்சி 690-ம் பக்கம் பார்க்க)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY
F. KINGSBURY, B. A. (Madras)
AND
G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 11-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

11 வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனு
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே.

Astrology plays a large part in popular Hinduism, and the influence of baleful or auspicious stars must be reckoned with in daily life. Most baleful of all is the influence of the eclipse, which is caused by two dragons Rahu and Ketu which swallow the moon or the sun. This stanza enumerates the nine planets, Sun, Moon, Mars, Mercury, Jupiter, Venus, Saturn, Rahu and Ketu, and says that to the singer, who has Siva in his heart, all of them, even the dragons of eclipse, are auspicious. It is a powerful and characteristically Hindu way of saying that all things work together for good to those who love God.

The reference to the bamboo constantly recurs in descriptions of ladies' beauty. Everyone who has seen a feathery clump of bamboo trees waving in the breeze will understand it as a symbol of delicate grace.

The vina is the most delicate and beautiful instrument played in South India.

11 She shares His form whose shoulders' curve vies with the bamboo's grace.
His throat the poison drank, He touched the vina into tune.
The lustrous moon and Ganges crown His hair, and He a place
Hath made Himself within my heart. Wherefore let shine the moon
Or sun or any star of good or ill, or serpents twain.
For Siva's slave all are benign, all work for him great gain.

—— (To be Continued)

---



---

(முன் 688-ம் பக்கத் தொடர்ச்சி)

காரன் ஆனாலும் சரி அழகனே, கஞ்சனே, யாராயிருந்தாலும் தன் வாழ்க்கையை நடத்தும்போது திருப்தியை மேற்கொண்டு இன்புறும்படி வேண்டுகின்றோம். நாம் மாயைக்குக் கட்டுப் பட்டவர்கள்தாம். நாம் முற்றும் துறந்த முனிவர்கள் அல்லர். எனவே ஓரளவுக்கு முடிந்தவரை கிடைத்தால் ஆன்ம மகிழ்ச்சி கொண்டு, கிடைக்காவிட்டால் எல்லாம் நன்மைக்கே என்ற தத்துவத்தை மனதிற்கொண்டு மனத்தைத் துன்பத்திற்கு உள்ளாக்காமல் பற்றற்ற தன்மைக்கு நம்மைத் தயாராக்கிக் கொள்ள வேண்டும். அதன் பயனைத்துய்த்து என்றும் இன்ப மடைய வேண்டும் என்றே வேண்டிக் கொள்கிறோம்.

——

# பெரிய புராணம்

## பன்னிரண்டாம் திருமுறை

காரைக்குடி இந்து மதாபிமான சங்கப் பாரதி விழாக் கவி அரங்கில் அரங்கேறியவை.

**திரு. சொக்கு சுப்பிரமணியன், M. A., அவர்கள்**

செந்தமிழே! உயிர்த்திரளே! தேனே! பாகே!
செங்கரும்புத் தனிச்சுவையே! இன்ப ஊற்றே!
இந்தொளிரும் சடையான்றன் புகழைப் பாட
இனிக்கின்ற உன்மொழியே வேண்டு மென்றுன்!
சொந்தமுடன் பேணுகின்ற அன்புச் செல்வீ!
சொற்கலையே! தமிழ்ச்சுடரே! என்றன் தாயே!
வந்தனைகள் செய்துன்னை வாழ்த்து கின்றேன்!
வண்டமிழே எந்நாவில் எழுவாய் நீயே!

அமிழ்தமெனக் கடலேழும் குடித்துத் தீர்த்த
அகத்தியனும் தமிழ்முனிபோல் இலக்கி யத்தின்
இமிழ்கடலில் முழ்கிஉயர் முத்தெ டுத்தே
எமக்களிக்கும் தமிழ்க்கடலே! ஐயா என்றன்
தமிழார்வம் குறையாது வளர்க்கும் நல்ல
தண்பொய்கை நீருற்றே! அன்புக் குன்றே!
கமழ்மணமாய்ப் புகழ்பரப்பும் தமிழர் நாட்டின்
கலைச்செல்வ! உங்களிரு தாள்கள் போற்றி!

திருமுறைகள் அரங்கிற்குத் தலைமை தாங்கும்
தென்றமிழக் குலம்சார்ந்த தலைவ ரேறே!
வருமுறையால் திருமுறைக்குப் பெருமை சேர்த்த
வண்டமிழக் கவியுடையீர்! கவிதை நண்பீர்!
தெருவனைத்தும் தமிழ்மணக்கும் தேனும் நாணத்
தென்னவளின் இசைமணக்கும் காரை நாட்டின்
உருவமைய வந்தோரே! உங்கட் கெல்லாம்
உரைக்கின்றேன் என்வணக்கம் கொண்மின்! கொண்மின்!

அரிமாக்கள் திருமுன்னே அஞ்சி அஞ்சி
அடியேனும் நடுங்குகையில் என்றன் முன்னர்த்
திரிசூலம் ஏந்துகின்ற சிவனுர் தோன்றித்
திகைக்காதே பக்தாநீ பாடு கென்றுர்;
திரிபுரத்தைச் சுட்டெரித்த விண்ணுேர் தாதை!
சிந்தையிலே வாழுகின்ற அன்புச் செம்மல்!
எரிசூடி நடமாடி அருளால் நும்முன்
எளியேனும் பாடுகிறேன்! பிழைபொ றுப்பீர்!

மன்னரெலாம் வாழ்ந்திருந்த நாளில் கூட
மலர்தமிழின் வரலாற்றைக் காணுேம்! காணுேம்!
கின்னரரும் கிம்புருவும் கவிதை தன்னில்
கிளேகிளேத்து நடமாடக் காண்போம்! காண்போம்!
தென்னகத்து வரலாறு இருண்ட தொன்றும்;
திருத்தொண்டர் புராணமதை நீக்கும் கன்றும்!
இன்னவர்கள் இதுசெய்தார் என்று காண
ஈராறு திருமுறைபோல் ஏதும் இல்லே!

தொண்டைவள நாட்டினிலே குன்றத் தூரில்
துகள்தீர்ந்த குலத்தினிலே வந்து தித்தான்;
கண்டைநிகர் மொழிகற்றுன்; கலேயைக் கற்றுன்;
கல்சொல்லும் கதையனேத்தும் கற்று ணர்ந்தான்;
வண்டமிழக் குறள்கொண்டு புலியார் சோழ
வளரிளமைப் பேரரசின் அமைச்ச ருனுன்;
எண்டிசையும் புகழ்வாய்ந்தான் சேக்கி ழானே
இளமையிலே அருண்மொழியாம் பெயரைப் பெற்றுன்!

அறங்காட்ட வந்திட்ட சமணம் நல்ல
அணியாம்சிந் தாமணியைத் தரவே மண்ணில்
மறங்காட்டப் பிறந்தவனும் சோழ மன்னன்
மனமகிழக் காப்பியத்தைப் படித்தி ருந்தான்;
கறங்காட்டம் சமண்சாரும் சோழன் சைவக்
கலேயழகில் திளேத்திடவே வேண்டும் என்று
திறங்காட்டும் மதியமைச்சன் சேக்கி ழானே
திருத்தவழி காணுதற்கு முயன்றுன்! வென்றுன்!

சிதைவெண்ணம் கொண்டோர்கள் புராணம் என்ன
சிறந்ததொரு காப்பியமா என்று கேட்பார்;
சுதைவெண்ணே அறிவுடையார் என்ன செய்வார்?
சொல்லுகின்றேன் காப்பியந்தான் சான்று வேண்டும்!
கதைத்தலைவர் சுந்தரனுர்; பொருளோ சைவம்;
கதையினிலே ஊடாடும் அவரின் வாழ்வு
இதையுணரார் காப்பியந்தான் இல்லை என்றே
எழுதுகிருர் பேசுகிருர் அறிய மாட்டார்!

உருவொன்றும் இல்லாதான் புகழைப் பாட
உலகெலாமென் றடிஎடுத்தே உரவோன் தந்தான்
அருளொன்றும் அடியார்க்கே ஆட்டம் ஆடி
ஆனந்தத் தேன்சொரியும் அம்ப லத்தில்
அருவான உருவான அனைத்து மான
அண்ணலவன் அடியார்தம் செய்தி எல்லாம்
செருபகையாம் சமணத்தைக் கல்ல வேண்டிச்
சேக்கிழான்றன் சிந்தையிலே வளர்ந்த வம்மா!

பலகடவுள் பல்சமயம் உலகில் இன்று
பரவிமிகத் தொல்லைகளை விளைக்கு மந்தோ!
சிலமடவர் கடவுள்பல என்று கூறிச்
சிந்தையினைக் குழப்புகிருர் என்ன செய்வோம்!
நலமுடனே அன்புசிவம் என்று கூறும்
நற்சைவத் தமிழ்ப்பாதை நந்தம் பாதை!
உலகிலுள சமயமெலாம் சேரும் பாதை
உயர்வாழ்வு பெறுதற்கோ அதுவே தேவை!

செங்கற்கள் வரலாறு; சைவம் சாந்து;
செயிரில்லாத் தமிழ்ப்பாடல் நீரே ஆகும்;
தங்கநிற மாளிகைக்குச் சேக்கி ழானே
தகுதியுறு கொத்தனுமாய் அமைந்து விட்டான்;
பொங்கிவரும் புதுநிலவு ஒளிர்தல் போலப்
புகழ்வாய்ந்த காப்பியத்தை ஆக்கி விட்டான்
பொங்கலென நாமுண்ண வைத்து விட்டான்
புகழ்த்தொண்டர் சீர்பரவும் சைவ மைந்தன்!

தவளநிலா முகிலூடே தோன்றல் போலத்
தருமணத்து மணமகனும் ஆரூர் வந்தோன்
பவளநிறத் திருவுருவான் புகழைப் பாடிப்
பண்புலகை அமைத்திட்ட கடமைச் செல்வன்
உவமையிலாத் திருமுடியின் கருமை யூடே
ஊடாடும் துகில்வெண்மை காணும் என்றல்
உவமைநலப் பாங்கிற்கோர் எடுத்துக் காட்டாம்!
உயிர்ப்பான உவமைக்கோ அதுவே காட்டாம்!

"பிறவாமை இந்நிலத்தில் வேண்டும்; மீண்டும்
பிறப்புண்டேல் உன்னடியை மறவா தென்றும்"
உறவாக வாழ்கின்ற உள்ளம் வேண்டும்;
உன்னடியின் கீழென்றும் இருக்க வேண்டும்;
அறவாநீ எனக்கருள்க என்று கேட்கும்
அழகார்ந்த காரைக்கால் அம்மை இன்பச்
செறிவான வடிவொழித்துப் பேயே யாகச்
சிவனடியைத் தொழுதிறைஞ்சல் கருத்துக் குன்றம்!

கண்ணப்பர் கண்ணளித்த அன்பைக் காட்டும்;
காரைக்கால் அம்மையின்பேய் வடிவம் காட்டும்;
பண்ணமைய அஞ்செழுத்தைக் குழலால் ஊதி
பார்வளர்த்த ஆனுயர் வாழ்வு காட்டும்;
கண்ணுதலால் அடிபற்றும் தொண்டர்க் கொன்றும்
கரவாத இயற்பகையின் சீர்த்தி காட்டும்;
மண்ணெடுத்த தலையானைக் கல்லெ றிந்து
மனங்குளிர்ந்த சாக்கியனைக் காட்டும்! காட்டும்!!

மணிக்கதவம் தாள்திறக்கச் செய்தான் தன்னை
மாமுதலை வாய்ப்பிள்ளை மீட்ட கோவை
அணிக்கழுத்தில் கறைகொண்டான் தானைப் போற்றி
அமணொழித்துச் சிவம்சார்ந்த தமிழ வேந்தைத்
தணிப்பரிய காதலினுல் சைவத் தொண்டர்
தம்துகிலை வெளுத்திட்ட திருக் குறிப்பைப்
பணிக்குன்றும் விளங்கிட்ட தொண்டர் வாழ்வைப்
பறைசாற்றும் திருத்தொண்டர் புராணம் வாழ்க!

---



# தம்பிரான்தோழர்

திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்கள்,
திருவாவடுதுறைஆதீனச் சமயச் சொற்பொழிவாளர்,
அம்பாசமுத்திரம்



சமய குரவர்கள் நால்வர். அவர்கள் காட்டிய நன்னெறி சரியை கிரியை யோகம் ஞானம். திருநாவுக்கரசு சுவாமிகள், சரியை நெறியில் ஆண்டான் அடிமை மார்க்கத்தைக் காட்டினர். திருஞானசம்பந்த சுவாமிகள், கிரியை நெறியில் சற்புத்திர மார்க்கத்தைக் காட்டினர். ஆரூரர் யோக நெறியில் சகமார்க் கத்தைக் காட்டினர். மாணிக்கவாசக சுவாமிகள் ஞானநெறி யில் சன்மார்க்கத்தைக் காட்டினர். இவர்கள் காட்டிய மார்க்கம், சங்கரனை அடையும் நன்மார்க்கம். சிவஞான சித்தியாரில்,

"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந்
தாதமார்க்கம் என்னுஞ் சங்கரனை யடையும்
நன்மார்க்கம் நால் அவைதாம் ஞானயோக
நற்கிரியா சரியை யென நவிற்றுவதுஞ் செய்வர்."

என்று அருளியுள்ளார்.

இந்த உண்மையைத்தான் நம்மவர்கள், "நாலுபேர் சொன்னதைக்கேள். நால்வர் போனவழி போ. நன்மையேற் படு",மென்று சொன்னர்கள். இக்காலத்தில் இவர்களை மறந் தோம். அவர்கள் அருளிய பாடல்களைக் கேட்பதை மறந்தோம். அவர்கள் நடந்து காட்டிய நன்னெறியை மறந்தோம். அதனுல் "அரனை மறவேல்" என்பதையும் மறந்தோம். சமய நிலையங் கள் மறவாதிருக்க வழிசெய்ய வேண்டும். வழிசெய்யுமா?

சமயகுரவர்களில், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்பிரான் தோழர். திருவாரூரில் தியாகராசப் பெருமான் ஆரூரருக்குத் "தோழமை ஆக உனக்கு நம்மைத் தந்தனம், நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில் அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனைந்து நின்

வேட்கை தீரவாழி மண்மேல் விளையாடுவாய்'' என்றார். தம்பிரான் தோழர், யோகநெறி நின்று சகமார்க்கத்தைக் காட்டினார். சேக்கிழார் சுவாமிகள், தம்பிரான் தோழர் வாழ்வு யோகநெறி வாழ்வென அறிவிக்கிறார்.

"தென்னாவலூர் மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னுருங்கொடி மருங்கல் பரவையெனும் மெல்லியல்தன்
பொன்னுரும் மலைஙங்கல் புணர்குவடேசார் வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்".

ஆகவே தம்பிரான் தோழர் வாழ்வு,

"பெற்ற சிற்றின்பமே பேரின்ப மாமங்கு
முற்றவரும் பரிசுந்திபற
முனியாது மாயை யென்றுந்திபற."

என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்கியது.

தம்பிரான் தோழர், பரவையார் ஊடலினால் மனம் தளர்வுற்றுமிக வருந்தினார். இறைவன் திருமேனி கொண்டு எழுந்தருளினார். இறைவனிடம் தம்பிரான் தோழர்,

"ஆவதேசெய்தீர் இன்றென்அடிமை நீர்வேண்டா விட்டால்
பாவியேன் தன்னை அன்று வலியஆட்கொண்ட பற்றென்?
நோவுமென் அழிவுங்கண்டீர் நுடங்கிடை அவள்பால்இன்று
மேவுதல் செய்யீராகில் விடுமுயிர் "

என்று விழ்ந்தார். உயிர்காப்பன் தோழன் யென்ற முதுமொழிக் கேற்ப இறைவன் தூதுசென்றார். ஊடலை ஒழித்தார். இருவரையும் ஒன்றுகூட்டி வைத்தார். இருவரும் கூடிவாழும் வாழ்வைச், சேக்கிழார் அருளுகிறார்.

"இருவரும் தம்பிரானார் தாமிடையாடிச் செய்த
திருவருட் கருணைவெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய இன்பவெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவருள் ஒருவர்மேவும் நிலைமையில் உயிர்ஒன்றானார்."

ஆகவே இங்கும் யோகநெறியின் உட்பொருள் கூறப்பட்டுள்ளது.

ஆரூரர், இறைவனைத் தோழராகக் கொண்டதால் எல்லா நலங்களும் பெற்றார்.

செயற்குஅரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்குஅரிய யாவுள காப்பு. (திருக்குறள்)

தம்பிரான் தோழர், திருத்தொண்டர் புராணத்தின் தலைவர். பரவையார், சங்கிலியார் தலைவியர். தம்பிரான் தோழர் வாழ்க்கை வரலாறு, திருத்தொண்டர் புராணத்தில், தடுத்தாட்கொண்ட புராணம், ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணம், கழறிற்றறி வார் நாயனார் புராணம், வெள்ளானைச் சருக்கம் ஆகிய நாலு புராணங்களில் வருகிறது. ஆனால் சேக்கிழார் சுவாமிகள் "ஆலாலசுந்தரர்" என்ற பெயரை இரண்டு இடத்தில் மட்டும் குறிப்பிடுகிறார்.

திருத்தொண்டர் புராணத்திற்கு மூலநூல் தம்பிரான் தோழர் அருளிய திருத்தொண்ட தொகை. நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதி வழிநூல். சேக்கிழார் சுவாமிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் விரிவுநூல்.

இந்த உண்மையைச் சேக்கிழார் சுவாமிகள் "தம்பிரான் தோழரவர் தாம் மொழிந்த தமிழ்முறையே ஏம்பிரான் தமர்கள் திருத் தொண்டேத்தல் உறுகின்றேன்" என்று அருளியுள்ளார். மேலும் நம்பியாண்டார் நம்பி அருளியதை.

"அந்தமெய்ப் பதிகத் தடியார்களை
நந்த நாதனும் நம்பியாண்டார் நம்பி
புந்தி ஆரப்புகன்ற வகையினால்
வந்தவாறு வழாமல் இயம்புவாம்"

எனத் திருமலைச்சருக்கத்தில் அருளியுள்ளார்.

சேக்கிழார் சுவாமிகள் விரிவுநூல் செய்ததை சிவஞான முனிவர் கூறுகிறார்,

"தூக்கு சீர்த்திருத்தொண்டத் தொகைவிரி
வாக்கினாற் சொல்லவல்ல பிரான் எங்கள்
பாக்கியப் பயனாப்பதி குன்றைவாழ்
சேக்கிழான் அடிசென்னி இருத்துவாம்"

தம்பிரான் தோழர் பெருமையை, நம்பியாண்டார் நம்பி வாக்காலும், உமாபதி சிவம் வாக்காலும், சேக்கிழார் சுவாமிகள் வாக்காலும் அடுத்துக் காணலாம்.

---

1137-ம் ஞ, ஆவணி, புரட்டாசி மாதங்களில்

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9050 | காட்சியும் கருத்தும் | திருவாவடுதுறை ஆதினம், மாயூரம், ஸ்ரீ மாயூரநாதசுவாமி தேவஸ்தானம். |
| 9051 | சிவதத்துவ விவேகம் (குறிப்புரையுடன்) | ஷ |
| 9052 | நாளும் முழக்குவோம் | கா. சி. நாகராசன், M. A., அருளகம், தெற்குத் தேர்த்தெரு, திருநெல்வேலி. |
| 9053 | திருக்களர் ஆண்டவர் என்னும் ஸ்ரீ வீரசேகரஞான தேசிகஸ்வாமிகள் சரித்திர சுருக்கம் | திருக்களர் கோ. ஆ. வீர. மடம் கிருஷ்ணநந்த சுவாமிகள். |
| 9054 | கனகாபிஷேக விழா (12-3-61) அறிக்கையும் வரவு செலவு கணக்கும் | தருமபுர ஆதீனம் |
| 9055 | திருவானைக்கா அகிலாண்ட நாயகிமாலை (குறிப்புரையுடன்) | உ. வே. சா. நூல்நிலையம் சென்னை-20. |
| 9056 to 59 | The New Method Desk-work in Hindi (Book - 1) | By K. Rajagopalan, M.A. B.O.L. Lecturer in Hindi, Sir Theagaraja College, Madras-21. |
| 9060 | Tamil culture | Journal of the Academy of Tamil culture. |
| 9061 | The Journal of the Tanjore Sarasvathi Mahal Library | By S. Gopalan, B. A., B. L.; Hon: Secretary; T.M.S.S.M. Library. Tanjore. |

[தொடரும்]

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’



| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் .சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) .. | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை .. | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் .. | ... | 2 75 |
| 20 | .. யுத்த தேவகாண்டம் .. | ... | 2 00 |
| 21 | .. தக்ஷகாண்டம் .. | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் .. | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் .. | ... | 1 00 |
| | ஷ 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |

| | | |
|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... 0 13 |
| 36 | முது மொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 37 | திருவுசாததானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 5 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 53 | ஷ ஷ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 54 | ஷ ஷ காமத்துப்பால் ஷ | ... 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 5 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.